

# நகரத்தார் இதழ்



மாற்றூர் அருள்மிகு ஐந்நூற்றீசுவரர் கோவில்

## ஆகஸ்டு- 1988

ஆற்றூறு அம்பு, இளமதி, பொற்கொன்றை, தும்பை அணிவானை,
அறத்தின் வெள்ளை
எற்றூர் எம்பெருமானை, மகுடதன வணிகர்குல இறையை, சீற்றக்
கூற்று, ஊர்தியுடன்சாயக் குலவுபதம் பெயர்த்தானை, குளிர்பூஞ்சோலை
மாற்றூர்ஐந் நூற்றீச மணியை, என்றும் மறவாது வழுத்தி வாழ்வாம்

ஆசிரியர்: சுப. செந்தமிழன்

ஓம்
தாய் தீப்பாய்ந்தாளுக்கு வணக்கம்
தமிழ் அன்னைக்கு வணக்கம்

# நகரத்தார் இதழ்


மலர் 2  இதழ் 3





ஆசிரியர்
சுப. செந்தமிழன்

எண்.8,
ராசசேகரன் தெரு
(நீதிமன்றம் பின்புறம்)
சிவகங்கை-623 560
பசும்பொன் முத்துஇராம-
லிங்கம் மாவட்டம்



ஜூலை - 1988
விபவ வருடம் ஆடி மீ

தனி இதழ்
நன்கொடை ரூ. 2/-

ஆண்டு நன்கொடை ரூ. 20/-


தமிழ்நாடே வாழ்க – எம்
தாய்நாடே வாழ்க
அமிழ்தாகிய இயலிசை கூத்தென்னும்
தமிழாகிய உயிர் தழையும் விழுமிய தமிழ்நாடே வாழ்க
– புரட்சிக்கவிஞர் பாரதிதாசனார்.

# விநாயகர் வணக்கம்.

பாலும், தெளிதேனும், பாகும், பருப்பும் இவை
நாலும் கலந்து உனக்கு நான் தருவேன் - கோலம்செய்
துங்கக் கரிமுகத்துத் தூமணியே நீ எனக்குச்
சங்கத் தமிழ்மூன்றும் தா

- அவ்வையார்

அம்மை நீ: அப்பன் நீ: அன்புநிறை சுற்றம் நீ:
செம்மைசால் நட்பில் சிறந்தோன் நீ: - இம்மைஅருள்
செல்வமொடு கல்வியும் நீ: தேசி விநாயகனே!
எல்லாமும் நீயே எனக்கு

- கம்பர் அடிப்பொடி

புத்தூர் உறையும் புனிதனை, பூவணத்துஎம் போர்ஏற்றை
வித்தாய் மிழலை முளைத்தானை, வேள்விக்குடி எம்
வேதியனை
பொய்த்தார் புரம் மூன்று எரித்தானை, பொதியில்
மேயபுராணனை
வைத்தேன் என்தன் மனத்தே உள்ளே மாத்தூர் மேய
மருந்தையே

- தேவாரம்
- திருநாவுக்கரசு சுவாமிகள்

ஆற்றாறு அம்பு, இளமதி, பொற்கொன்றை, தும்பை
அணிவானை, அறத்தின் வெள்ளை
ஏற்றூர்எம் பெருமானை, மகுடதன வணிகர் குலஇறையை
சீற்றக்
கூற்று, ஊர்தி யுடன்சாயக் குலவுபதம் பெயர்த்தானை,
குளிர்பூஞ்சோலை
மாற்றூர் ஐந் நூற்றீச மணியை, என்றும் மறவாது வழுத்தி
வாழ்வோம்

ஏழிசையின் மொழியாளை, எவ் உலகும் ஈன்றாளை
இறைவர்பாகத்து
ஆழியஆ தரத்தென்றும் அமர்வாளை அருள்பொழியும்
ஆட்சியாளை
காழிவரு கவுணியற்கு அன்று உணவு அமுதம் அளித்தாளை
கவின்மாற்றூர்வாழ்
வாழிய, வைசியர்க்கு அருளும் பெரியநாயகி இருதாள்
மனத்துள் வைப்போம்

நன்றி:- மாற்றூர்க்கோவில் குட நீராட்டு விழா அழைப்பிதழ்

# மாற்றூர்க்கோவில்

## அருள்மிகு பெரியநாயகி அம்பிகை உடனாய அருள்மிகு ஐந்நூற்றீசுவரர் திருக்குட நீராட்டு விழா நிகழ்ச்சி நிரல்.

---

விபவ ஹு ஆவணி மீ 1௨ (17—8—1988) புதன் கிழமை

அஸ்த நட்சத்திரம் காலை மணி 5க்கு மேல் 6க்குள் கடகலெக்கினத்தில் அனுக்ஞை, விக்னேசுவர பூசை, தனபூசை முதலியன. காலை 8 மணிக்கு கணபதி ஓமம், நவக்கிரக ஓமம். மாலை 3 மணி முதல் வாஸ்து சாந்தி, மிருத்சங்கிரகணம் அங்குரார்ப்பணம் முதலியன.
இரவு 7-30 மணிக்கு கடஸ்தாபணம் 8 மணிக்கு யாக சாலை முதற்கால பூசை.

2௨ (18—8—1988) வியாழக்கிழமை

காலை 8 மணிக்கு யாக பூசை.
இரவு 7 மணிக்கு யாக பூசை
8 மணிக்கு லெட்சுமி பூசை, ரட்சா பந்தனம் முதலியன.

3௨ (19—8—1988) வெள்ளிக்கிழமை

காலை 5 மணிக்கு யாகபூசை.
8-09 மணிக்கு மேல் 9-09க்குள் சப்தமி திதியும், சுவாதி நட்சத்திரமும், சித்தயோகமும் கூடிய நிஷ்பஞ்சக கன்னியா லெக்கினத்தில் திருக்குட நீராட்டு விழா. மாலை 4 மணிக்கு மகாபிஷேகம். இரவு 7 மணிக்குத் திருக்கல்யாணம்.

# நகரத்தார்களின் இறைப்பணிக்கு வாழ்த்துக்கள்



காசி விசாலாட்சி கவி மதுரை மீனாட்சி
கட்டியுள்ள ஆடைகளும் கழுத்திலுள்ள (பொன்னகையும்)
சுற்றியுள்ள மண்டபமும் தூக்கி வரும் வாகனமும்
முற்றும் அழியாத மொட்டைக் கோபுரத்தழகும்
அண்ணாமலையில் அமர்ந்திருக்கும் பேரழகும்
ஆக்கிக் கொடுத்தவர்கள் அமர்ந்திருந்து காத்தவர்கள்
நாட்டுக்கோட்டை வளர்த்த நகரத்தார் அல்லாமோ!

– கவியரசு கண்ணதாசன்

---

வாழி நகரத்தார் வள்ளன்மை மிக்கோர்கள்
ஊழி பலவும் உயர்ந்திருக்க ஆழி சூழ்
இத்தலத்தில் கோயில் இயற்றினோர் வாழியவே
எத்தலமும் போற்ற இனிது

– திருமுருக கிருபானந்தவாரியார்

---

ஓண்மையுயர் கடவுளிடத்தன்புடையார்

- பாரதியார்

---

''யாதொரு தெய்வங்கண்டணர்
அத்தெய்வமாகி ஆங்கே
மாதொரு பாகனர் தாம் வருவார்''
நாட்டுக்கோட்டை நகரத்தார் எல்லாத் தெய்வ மூர்த்தி
களையும் எத்துணையும் பேதமுறாது வழிபடும் இயல்பான
சிறப்புடையவர்

- கோவிலூர் ஆதினம்
இராமநாத ஞானதேசிகர்

நகரத்தார் என்றுமே தெய்வபக்தியும், சமயப் பற்றும் கொண்டவர்கள் என்பது உலகறிந்த உண்மை. தமிழகத்தில் பல கோயில்கள் நகரத்தார்களுடைய கை வண்ணத்தால் புதுப் பொலிவு எய்தின பண்டையத்தமிழ் மன்னர்கள் கட்டிவைத்த மாபெரும் ஆலயங்கள் அழிந்து விடாமல் பழுது பார்த்துக் காத்து அழியாப் புகழ் பெற்றவர்கள். கடல் கடந்தும்கூட ஆலயங்களைப்புதுக்கி புதியன தோற்றுவித்து சரித்திரம் படைத்த பெருமை பெற்றுள்ளார்கள். அவர்களின் பணியால் மறைகள் வந்தன, ஆலயங்கள் பொலிவு பெற்றன சமயம் தழைத்தது.

பெருமைக்குரிய மத்சத்குரு சாந்தானந்தசுவாமிகள்

புதுக்கோட்டை

தமிழகத்தில் கோவில்கள் தோறும் திருப்பணி செய்து நற்பெயர் பெறும் நாட்டுக்கோட்டை நகரத்தார்கள் பல்லூழி காலம் வாழ்க

பெருமைக்குரிய ஞானசம்பந்த தேசிகர்

மதுரை

நாட்டுக்கோட்டை நகரத்தார் சிவ வழிபாட்டில் உறைப்பும், சிவப்பணிகளில் பேரீடுபாடும் கொண்டவர்கள் தமிழகத்துப் பாடல் பெற்ற தலங்கள் பலவற்றை பெரும் செலவில் திருப்பணி செய்தவர்கள். அவர்கள் இவ்வாறு செய்யாவிட்டால் இக்கோயில்கள் பலசிதைந்துபோயிருக்கும்

– தருமபுரம் ஆதினம்

மாயூரம்

---

## நகைச்சுவை விருந்து.

தலைமை ஆசிரியர்: "என்ன நம்ம பள்ளியிலே ஒரு மாணவர்கூட தேறவில்லையே?

ஆசிரியர்: "அதுதான் சார் எனக்கும் ஆச்சரியமா இருக்கு" ரேடியோவில் விளம்பரம் செய்கின்ற பிசுகட்டை தான் 'பஸ்ட் ராங் வாங்குவாங்க' என்ற நம்பிக்கையுடன் நம்ம மாணவர்களுக்கு கொடுத்தேன்.

– ராம.வ. ராமசாமி

கோட்டையூர்

# ஆலயம் ஒரு சிறு விளக்கம்.

புகழ் பெற்ற ஆலயங்கள் என்ற நூலிலிருந்து



குன்றக்குடி அருள்மிகு சண்முகநாதர் கோவில்

உள்ளம் பெருங்கோயில் ஊனுடம்பாலயம்
வள்ளற் பிரானார்க்கு வாய் கோபுர வாசல்
தெள்ளத் தெளிந்தார்க்கு சீவன் லிங்கம்
கள்ளப் புலனைந்துங் களா மணிவிளக்கே

— திருமூலர்

ஆலயம் ஆXலயம் ஆ என்பது ஆன்மா என்ற பொருளையும், லயம் என்பது சேருமிடம் என்ற பொருளையும் தரும். கடவுளது திருவடியில் ஆன்மாக்கள் சேருமிடம் எனப்படும்.

கோயில்: கோXஇல்: கோ-கடவுள, இல் – இருப்பிடம். கடவுள் இருக்குமிடம்.

கடவுள்: கட என்னும் பகுதியையும், உள் என்னும் தொழில் பெயர் விகுதியையும் கொண்டது. கடவுள் என்பதற்கு எல்லாவற்றையும் கடந்தவர் என்று பொருள் தரும்

விமானம். நாகரம், திராவிடம், வேசரம் என மூன்று வகைப்படும். பீடம் முதல் அனைத்தும் சதுரமாக உள்ளது நாகரமாகும். கண்டம் முதல் வட்டமாக உள்ள விமானம் வேசரம் எனப்படும். கண்டம் முதல் எட்டுக் கோணமாக உள்ள விமானம் திராவிடமாகும்.

கொடிமரம்: கொடிமரம் சூட்சுமலிங்கமாகும். கொடி மரத்தின் அடிப்பாகம் சதுரமாக இருக்கும். இது இறைவனின் படைப்பை விளக்குகின்றது. அதன்மேலுள்ள பாகம் எண்கோணமாக இருக்கும். இது காத்தலைக் குறிக்கின்றது. மேலுள்ள நீண்ட பாகம் உருத்திரனைக் குறிக்கும் இது அழித்தலைக் குறிக்கின்றது.

சின்முத்திரை: ஞானத்தைக் கையால் காட்டும் அடையாளமாகும்.

மனிதன்: மனிதன் என்னும் சொல்லினுள் "மன்" என்பதற்கு நினைப்பவன் எனப் பொருளாகும். மனம் ஒன்றுள்ளவன் மனிதன் எனப் பொருள் கொள்வலாம்.

தீபம்: சிவபெருமானுக்கு தீபம் காட்டுதலின் கருத்து, சிவசக்தியாகிய தீபம் ஆன்மாவின் மலத்தைப் போக்கி ஞானத்தை விளக்கும்.

நைவேத்யம்: ஆன்மகுணமாகிய அகங்காரம், சங்கற்பம் குரோதம், மோகம் ஆகியவற்றை இறைவனுக்குச் சமர்ப்பித்தல் ஆகும்

கற்பூரம்: வெண்மை நிறத்தைப் பொருந்தி தீப்பற்றிய விடத்தே அதன் வடிவமாக விளங்கி. ஒருபற்றுமில்லாமல் முற்றும் கரையப்பெற்று வானத்துடன் கலந்துவிடுவது போல் ஆன்மாவானது சத்துவக்குணத்தை அடைந்து ஞானமாகிய தீபத்துடன் கலந்து, மூவகைச் சரீரங்களும் எல்லாப் பற்றுகளும் நீங்கப்பெற்று மேல்நிலை அடையும்.

சிவத்தின்தன்மை: இறைவனை சச்சிதானந்தம் என்று அழைக்கின்றனர். சத் - அழியாதது, சித் - அறிவுடையது ஆனந்தம் இன்பமயமானது

சிவலிங்கம்: லிங்கம் என்பதற்கு குறி என்று பொருள். குறி என்றால் அடையாளம். அடையாளம் காண முடியாத இறைவனை அடையாளம் காணுவதற்கரிய அடையாளமே சிவலிங்கமாகும்.

அர்த்தநாரீசுவரர்: இறைவன் ஒரே வடிவில் தோன்றுவார். இதனை அர்த்தநாரீசுவரர் என்பார். அர்த்தம் - பாதி, நாரி - மாது அர்த்தநாரீசுவரர் என்பதற்கு பாதி மாதுடைய பரமன் என்று பொருள்படும்.

தட்சிணாமூர்த்தி: சிவபெருமானது குருவடிவே தட்சிணாமூர்த்தியாகும்.

குடமுழுக்கு: 1] அனுஞ்ஞை 2] கணபதி வழிபாடு 3] தேவர்கள் வழிபாடு 4] மண் எடுத்தல் 5] முளையிடு 6] காப்புக்கட்டு 7] கும்பத்தாபனம் 8] கலாகர்சணம் 9] யாகசாலை 10] விக்கிரக துய்மை 11] சாபர்சாகுதி 12] அட்ட பந்தனம் 13] குடமுழுக்கு 14] மகாபிசேகம்

# மாற்றூர் ஐந்நூற்றீசுவரர்

வீர. சுப்பிரமணியம், B Sc., M.A.,
செயலர் - மாற்றூர்க் கோயில்.

காவிரித் தாய் புகுந்து வளங்கொழிக்கும் திருச்சி - தஞ்சாவூர் மாவட்டங்களுக்கும், அரசர்களும், அறிஞர் பெருமக்களும் வாழ்ந்து, தமிழ் வளர்த்த மதுரை மாவட்டத்திற்கும் இடையே உள்ள பசும்பொன் முத்துராமலிங்க மாவட்டம் இவற்றால் புகழுறாவிட்டாலும் தான் கண்ட கோயில்களால் தனிப்புகழ் பெற்றுள்ளது. தேவார திருவாசகப் பாடல் பெற்ற திருப்புனல்வாயில், காளையார் கோவில், திருவாடானை, திருபூவணம், பிரான்மலை முதலியவைகளும் ஆழ்வார் பாடல் பெற்ற திருகோஷ்டியூரும் சைனர் கோயிலுள்ள அநுமந்தக் குடியும் குகைக் கோயில்கள் உள்ள குன்றக்குடி, பிள்ளையார்பட்டி, பூங்குன்றம் முதலியவைகளும் கம்பன் கோயில் உள்ள நாட்டரசன்கோட்டையும் ஈண்டு குறிப்பிடத்தக்கவை.

இத்தகைய கோயிற் சிறப்பு மிக்க பசும்பொன் முத்துராமலிங்க மாவட்டத்தில் காரைக்குடிக்கு கிழக்கே 5 மைல் தூரத்திலுள்ள இலுப்பைக்குடி என்னும் கிராமத்துக்கு வடகிழக்கில் 2 மைல் தொலைவில் உள்ளது மாற்றூர். இந்த ஊரின் நடுவே தான் சித்தர்களால் பூசிக்கப்பட்ட சிறப்பு வாய்ந்த பிரம்மாண்டமான ஐந்நூற்றீசுவரர் பெரியநாயகி அம்பாள் ஆலயம் இருக்கிறது. (ஔவையார் என்பதை அவ்வையார் எனவும் எழுதுவது போல் ஐந்நூற்றீசுவரர் என்னும் பெயரைப் பண்டைக் காலத்தில் அய்னூற்றீசுவரர் என்றே எழுதி வந்திருக்கின்றனர். ''மா.அ.பெரி தேவஸ்தானம்'' என்ற கோயிலின் பழைய ரெக்கார்டுகளில் காணப்படுகிறது) இரண்டுபுறம் நெடிதுயர்ந்த கோபுரங்களாலும் மற்ற இரு பக்கங்களில் உயர்ந்த மதிற் சுவர்களாலும் சூழப்பெற்றுள்ள இக்கோயில் நகரத்தார்களால் எழுப்பப்பெற்றதாகும்.

சிறியதாக இருந்த கோயிலை அழித்துவிட்டுப் பெரியதாகவும், பெருமை மிக்கதாகவும் ஆக்குவதற்கான திருப்பணி வேலைகள் 1940ம் ஆண்டு ஜூன் மாதம் தொடங்கி 1949ம் வருடம் சனவரியில் முற்றுப்பெற்றன. இந்தத் திருப்பணி வேலைக்கு சுமார் 16 லட்சம் ரூபாய் செலவிடப்பட்டுள்ளது. கோயிலுக்கு எதிரேயுள்ள 42 தூண்களைக் கொண்ட கல் மண்டபத்தைக் கட்டுவதற்கு மட்டும் சுமார் 80,000 ரூபாய் செலவாயிற்றாம். திருப்பணி வேலைகள்

முடிவுற்றதும் சர்வதாரி ஆண்டு தை மாதம் 20ம் நாள் 2-2-1949 கும்பாபிஷேகம் சிறப்பாகச் செய்யப் பெற்றிருக்கிறது.

## புராணம்

கொங்கண மகரிஷி ஐந்நூறு மாற்றுக் கண்டுபிடிக்க இங்கு தவமிருந்து அதற்கான பல முயற்சிகளைச் செய்து வந்தார். இந்த முயற்சிகள் பலித்து அவர் தங்கத்துக்கு ஐந்நூறு மாற்றுக் கண்டறிந்து விட்டால் அவருக்குத் தேவலோகத்தில் இந்திர பதவி கிடைக்கும். அவர் இவ்வாறு முயற்சிகள் செய்து வருவதை அறிந்த இந்திரன், தன்னுடைய பதவி போய்விடுமோ என்று பயந்து சிவபெருமானிடம் சென்று முறையிட்டான். அவர் தன்னைக் கதியென்று; நம்பி வந்த அவனுக்கு வருத்தம் தரலாகாது என்றெண்ணி, அவனுக்கு அபயக் கரம் நீட்டிப் பிட்சாடன வேடம் பூண்டார். தன் குடிலுக்கு எதிரே அடுப்பிலிருந்த பாத்திரத்தில் ஏதேதோ ஊற்றிப் பொன்னுக்கு மாற்றுக் கண்டுபிடிக்க முயன்று கொண்டிருக்கும் கொங்கண மகரிஷியிடம் சென்று, "ரிஷியே. தண்ணீர் தவிக்கிறது; தாகம் பொறுக்க முடியவில்லை; நீங்கள் அதை நீக்க அருள்புரிய வேண்டும்" என்றார் சிவபெருமான். பிச்சைக்காரனின் தாகத்தை உண்மையென்றே நம்பிவிட்ட மகரிஷி அவன் மீது இரக்கம் கொண்டு அவன் தாகத்தைப் போக்க எண்ணித் தன் குடிலுக்குள் தண்ணீர் கொண்டுவரச் சென்றார்.

இது தான் சமயமென்று வெளியே பிச்சைக்கார வேடத்திலிருந்த சிவபெருமான், அடுப்பின் மீதும் தரையிலும் பாத்திரங்களில் வைக்கப்பட்டிருந்த திரவங்கள் எல்லாவற்றையும் கொட்டிக் கவிழ்த்து விட்டு மாயமாக மறைந்து விட்டார். குடிசையிலிருந்து தண்ணீர்ச்செம்புடன் வெளியே வந்த ரிஷி, பாத்திரங்களில் இருந்த கலவைகள் கொட்டப்பட்டிருப்பதையும், வந்து நின்ற பிச்சைக்காரன் மறைந்து போனதையும் அறிந்து, பிச்சைக்காரனாக வந்தவர் சிவபெருமானே என்பதையும் அவருக்குத் தம் முயற்சிகளில் விருப்பமில்லை என்பதையும் தம் ஞானக் கண்களால் உணர்ந்து கொண்டார். அந்த மகரிஷி பிரதிஷ்டை செய்ததால் இங்குள்ள இறைவனுக்கு ஐந்நூற்றீசுவரர் என்ற பெயர் உண்டாயிற்று என்பது இக்கோயிலின் ஸ்தல புராணம்.

கொங்கண மகரிஷி பொன்னுக்கு மாற்றுக் கண்டறியும் முயற்சியில் ஈடுபட்டிருந்த இடத்தில் இவ்வூர் தோன்றியதால், மாற்றூர் எனும் பெயர் பெற்றது. பின்னர் அதுவே மாத்தூர் எனத் திரிந்தது.

## வரலாறு

ஐந்நூற்றீசுவரர் என்னும் இறைவன் பெயர், கல்வெட்டுகளில் காணப்படும். "ஐந்நூற்றீசுவரர்" என்ற வணிகக் குழுக்களின் பெயரோடு தொடர்புடையது என்பது திரு. சோம.லெ அவர்களின் கருத்து.

இங்கிருந்து சிலமைல்கள் தொலைவில் (புதுக்கோட்டை மாவட்டத்தில்) உள்ள நார்த்தமலைச்சரிவில் தமிழ்வணிகரின் தலைநகரான "திருவெண்ணெயில்" இருந்ததாகவும் அதன் அருகிலுள்ள 'செட்டிப்பட்டி, என்னும் கிராமத்தில் ஐந்நூற்றுவப் பெரும்பள்ளி" ஒன்று இருந்ததென்றும் பல்லவர் காலத்தில் "திசையாயிரத்து ஐந்நூற்றுவர்" என்றும், "ஐந்நூற்றுவர்" எனவும் குறிக்கப் பெற்ற வணிகப் பெருமக்கள் இப்பகுதியில் வாழ்ந்திருந்ததாகவும் 'சோம. லெ' அவர்கள் கருத்துத் தெரிவித்துள்ளார்.

மேலும், ஐந்நூற்றுவத் தேவன், ஐற்றுவப் பேரறையன் என்ற இருவர் கையெழுத்திட்ட ஓர் ஆதாரத்தின் நகல் விரையாச் சிலை எனும் ஊரிலுள்ள கல்வெட்டில் இருப்பதையும் முன்பு பில்லமங்கலத்தில் இருந்ததாகக் கூறப்படும் ஐந்நூற்றுவர் ஊரணியையும், மற்றும் அழிந்து விட்ட ஐந்நூற்றுவ மங்கலம், ஐந்நூற்றுவ நல்லூர் எனும் ஊர்ப் பெயர்களையும் பார்க்கும் போது ஐந்நூற்றுவர்கள் என்னும் இனத்தார் (வியாபாரத்தைத் தொழிலாகக் கொண்டவர்கள்) வாழ்ந்தது உண்மையே என்பது புலனாகிறது.

இதன்படி பார்த்தால் இக்கோயில் முன்னொரு காலத்தில் வாழ்ந்த ஐந்நூற்றுவன் ஒருவனின் பேரால் எழுப்பப் பெற்றதென்பது தெளிவாகிறது. அவன் கல்விக் கேள்விகளில் வல்லவனாயும், வணிகத்திலும், வள்ளன்மையிலும் சிறந்தவனாயும் மக்களுக்குத் தொண்டாற்றிய நல்லவனாயும் இருந்திருத்தல் வேண்டும்.

## காலம்

புதுக்கோட்டையில் காணப்படும் சில கல்வெட்டுக்களின்படி பார்க்குமிடத்து ஐந்நூற்றுவரின் காலம் கி.பி. 9ம் நூற்றாண்டினதாக மதிக்கப்படுகிறது. ஆனால் பிரான் மலையில் காணப்படும் கல்வெட்டு ஒன்றின்படி இவர்களின் காலம் கி.பி. 18ம் நூற்றாண்டின் பிற்பகுதியாக இருக்கலாம் என்று தோன்றுகிறது. ஐந்நூற்றுவரின் காலத்தை ஒட்டியே இக்கோவிலின் பழமையும் மதிப்பிடப்படும்.

## பிரிவுகள்

இக்கோயிலில் எழுந்தருளியிருக்கும் ஐந்நூற்றீசுவரரையும், இறைவியாகிய பெரியநாயகி அம்பாளையும் தங்கள் குல தெய்வங்களாகக் கொண்டவர்கள், முற்காலத்தில் ஏழு ஊர்களில் வாழ்ந்து வந்தனர். ஒவ்வொரு ஊரினரும் ஒவ்வொரு பிரிவினராக (கோத்திரம்) எண்ணப்பட்டு வந்தனர். அந்த ஊர்களாவன: (1) உறையூர் (2) அரும்பாக்கூர் (3) மணலூர் (4) கண்ணூர் (5) கருப்பூர் (6) குளந்தூர் ஆகியன இன்று அவர்கள் பொருளாதார நிலையைச் சீர்திருத்தவே வேறு பல ஊர்களுக்கு குடியேறிச் சென்றுவிட்ட போதிலும் உறையூருடையார், மணலூருடையார், அரும்பாக்கூருடையார், மண்ணூருடையார் கண்ணூருடையார், கருப்பூருடையார், குளத்தூருடையார் என்றே அழைக்கப்படுகின்றனர்

இக்கோயிலைச் சார்ந்தவர்கள் தம் வீட்டுத் திருமண அழைப்பிதழ்களில் ஸ்ரீ பெரியநாயகி அம்பாள் சமேத ஐந்நூற்றீசுவரர் திருவருளை முற்கொண்டு நிகழும் எனத் தொடங்கி எழுதுகின்றனர்.

மாற்றூர்க் கோயிலைச் [மாற்றூரில் இக்கோயிலில் மட்டுமே உள்ளது] சார்ந்த புள்ளிகள் 4600 [ஒரு புள்ளி என்பது ஒரு குடும்பத்தைக் குறிக்கும்]. அவர்கள் இன்று சுமார் அறுபது ஊர்களில் வாழ்ந்து வருவதாகச் சொல்லப்படுகின்றது. நகரத்தார்களின் 9 கோவில்களில் அதிகமான புள்ளிகளைக் கொண்டது இந்தக் கோவிலேயாகும்.

## திருவிழாக்கள்

முன்பெல்லாம் இக்கோயிலில் மாசி மாதத்தில் 'மாசி மகம்' பத்து நாட் திருவிழாவாகச் சிறப்புடன் நடைபெற்று வந்ததாம். இப்போது பணத்தட்டு காரணமாக அது நடைபெறவில்லை.

1963ம் ஆண்டில் கோடி அர்ச்சனை சிறப்பாக நடைபெற்றது.

கோயில், தென்னை மரங்களும், பசும் பயிர்களும் சூழ மிக அழகுடன் காட்சி அளிக்கின்றது. கோயிலைச் சுற்றி மதிற்சுவரை ஒட்டினாற் போல், நந்தவனம் உண்டு. கோயிலுக்கு எதிரே அகன்ற தெப்பக்குளம் காணப்படுகிறது. ஒரே சமயத்தில் 4 திருமணங்கள் தாராளமாக நடத்த வல்ல பெரிய விடுதியும் அருகிலேயே உள்ளது.

இங்கு காணப்படும் சிற்ப வேலைப்பாடுகள் கலையழகும், காண்பவர் கண்ணையும், கருத்தையும் கவரும் வனப்பும் மிகுந்து விளங்குகின்றன. பெரிய வாயில்களும், பெரிய தூண்களும் குறிப்பிடத்தக்கவை. கோயிலுக்கென்று வாகனங்கள், ரதங்கள், தேர் முதலியனவும் உண்டு.

மாற்றூர்க் கோயில் நகரத்தார்கள் பூஜை வகையறு டிரஸ்டுக்குச் செயலாளராகவும், பொருளாளராகவும் இருந்து இக்கோயிலைக் காரைக்குடி திரு சுப. மு. நா. வீரப்ப செட்டியார் அவர்கள் கவனித்து வந்தார்கள்.

தற்பொழுது மாற்றூர்க்கோயில் தலைவராக கோட்டையூர் திரு அ க. அ. சி த. அழ. சிதம்பரம் செட்டியார் அவர்களும் செயலர், பொருளாளராக திரு சுப மு. நா. வீரப்ப செட்டியார் அவர்கள் புதல்வர்கள் வீர. சுப்பிரமணியன், நாராயணன் அவர்களும் இருந்து இக் கோயிலை கவனித்து வருகின்றார்கள். மாற்றூர்க் கோயில் குடமுழுக்குவிழா குழுத் தலைவராக கோட்டையூர் இராம. லெ நா. அருணாசலம் செட்டியார் அவர்கள் இருந்து கவனித்து வருகின்றார்கள்.

'ஒப்புக்கும் உரைப்பதற்கும்
ஒரு நகரும் இல்லாத
மாத்தூர் தனில் மருவும்
மாதை ஐந்நூற்றீசருக்கு,
ஏற்றமுள்ள கர்ப்பக்கிருகம்
இலங்குமகா மண்டபமும்
திருக்குளம் பூவனமும் சிறக்க'

என வரும் பழைய பாடலொன்று இக்கோயிலின் சிறப்புக்களை மேற்குறித்தவாறு விளக்குகிறது.

---

குறிப்பு:- மாற்றூர் ஐந்நூற்றீசுவரர் ஆலயப்படம் அட்டையின் முன் பக்கத்தில், வெளியிடப்பட்டுள்ளது.



# "திருச்சியில் இரண்டு நாட்கள்"

சுப. செந்தமிழன்



தமிழகத்தின் நடுவில் அமைந்துள்ளது திருச்சி மாநகரம். திருச்சி நகருக்கு நான் 24—6—88 அன்று சென்றேன். அங்கே மலைக் கோட்டைக்கு மிக அண்மையிலுள்ள, 2,ஓத்தமால் தெருவிலுள்ள நகர விடுதிக்கு சென்ற பொழுது அதன் பொறுப்பாளர் கீழச்சிவல் பட்டியை சார்ந்த, பி.அழகாபுரி அழ. கருப்பையா செட்டியார் அவர்கள் என்னை இனிமையுடன் வரவேற்று தனது அறையில் தங்க வசதிசெய்து கொடுத்தார். நானும் அன்று மாலை திருச்சி வீகேயென் அவர்களைப் பார்க்க துவாக்குடி சென்றேன். அங்குள்ள பொறுப்பாளர்கள் கனிவுடன் வரவேற்று வரவேற்பு அறையில் என்னை இருக்கச் சொன்னார்கள். சிறிது நேரத்தில் வீகேயெனின் தனி உதவியாளர் என்னிடம் வந்து விபரத்தைக் கூறினர். நாளை சந்தித்துக் கொள்வோம் என்ற எண்ணத்துடன் நாகப்பா டிரேடிங் கம்பெனிக்கு வந்து திருச்சி நகரத்தார் சங்கத் தலைவர் L.N. லெட்சுமணன் அவர்களுடன் தொலைபேசி வழியே தொடர்பு கொண்டு பேசினேன் அவரும் மிகவும் கனிவுடன் உரையாடினர். பிறகு அன்று மாலை திருச்சி நகரத்தைப் பற்றி விவரங்களை தெரிந்து கொள்ள வேண்டுமென்ற ஆர்வத்துடன் எனது இனிய நண்பர் இராமலிங்கம் அவர்களைச் சென்று சந்தித்தேன். படிக்கும் பொழுதே துறுதுறுப்புடன் இருக்கும் அவர் தொழில்த்துறையிலும் அதே அளவு சுறு சுறுப்புடன் காணப்பட்டார். அன்றைக்கு இருந்த அதே கனிவு, அதே பேச்சு, அதே பண்பு அவரிடம் உயர்ந்த நிலையிலும் காணப்பட்டது. திருச்சியைப் பற்றி வந்துள்ள சில செய்தித் தாள்களை என்னிடம் தந்து உங்களுக்குத் தேவையான விபரங்களை இதிலிருந்து எடுத்துக் கொள்ளுங்கள் பிறகு நான் உங்களை சில இடங்களுக்கு அழைத்துச் சென்று விபரம் திரட்ட உதவுகிறேன் என்றார். அந்த உயரியவரின் வழியே திருச்சியைப் பற்றி

பல விவரங்களை நான் சேகரித்துக் கொண்டேன் நான் சேகரித்த விவரங்களை திரட்டிய செய்திகளை நீங்களும் படித்துப் பயன் பெறவேண்டுமென்ற நோக்கத்துடன் கீழே தந்துள்ளேன்.

**திருச்சிராப்பள்ளி** நகரின் நடுவில் திருசிராமலை உள்ளது. இம்மலையில் சுவாமி, அம்மன் உச்சியில் பிள்ளையார்என்று மூன்று சிகரங்களூ (திரிசிரம்) உள்ளதால் திருசிராமலை எனப் பெயர் பெற்று நாளடைவில் திருச்சிராப்பள்ளி எனப் பெயர் வந்ததுயென்றும் ஒரு சிலரும், இராவணன் தம்பி திரிசிரன் இப்பகுதியில் இறைவனை வழிபட்டானென்றும், அதன் காரணமாக திரிசுராபுரம் எனப்பெயர் பெற்று பின் திரிசிராப்பள்ளியாகி காலப் போக்கில் திருச்சிராப்பள்ளி எனப் பெயர் வந்ததுயென்று மற்றும் சிலரும் கூறுகின்றனர். "திருச்சி வரலாறு" தொடக்கத்தில் திருச்சி முத்தரையர்கள் ஆட்சியின் கீழும், பின் சோழர்கள், பாண்டியர்கள் அதற்குப் பின் சுல்தான் ஆட்சிகளின் கீழும், பின் விசயநகர அரசர்கள் ஆட்சியின் கீழும் இருந்தது. மதுரை விசுவநாதராயர் வழி வந்த முத்து வீரப்பர் காலத்தில் திருச்சி நாயக்க அரசின் தலைநகரானது. பின் ஆற்காட்டு நவாபின் ஆட்சியின் கீழும், அடுத்து மராட்டியர் ஆட்சியின் கீழும் அதன்பின் ஐதராபாத் நிசாம் ஆட்சியின் கீழும், அடுத்து நவாப் அன்வாருதீன் ஆட்சியின் கீழும் இருந்த திருச்சி காலப் போக்கில் ஆங்கிலேயே ஆட்சியின் கீழ் வந்தது திருச்சி நகரம் 1886ல் நகராட்சியானது தமிழ்நாட்டின் நான்காவது பெரியநகரம் திருச்சியாகும்.

**திருச்சிக்கோட்டை** திருச்சிக் கோட்டை விசுவநாத நாயக்க மன்னரால் கட்டப்பட்டது என்றும், ஆற்காடு நவாப் அன்வாருதீனல் புதுப்பிக்கப்பட்டதுயென்றும் அங்குள்ளவர்கள் கூறுகின்றனர். திருச்சிக் கோட்டையின் எஞ்சியப் பகுதி மெயின் கார்டு கேட் வாயில் பகுதியாகும். இவ்வாயில் தெப்பகுளத்தின் தென்மேற்கில் உள்ளது. மெயின் கார்டுக்கு அருகேயுள்ள தெப்பக்குளம் விசுவநாத நாயக்கரால் தோற்றுவிக்கப்பட்டதாகும். தெப்பகுளத்திற்கு தெற்கில், சிறிது தொலைவில் நகரின் மத்தியில் அரசி மங்கம்மாள் அரண்மனை உள்ளது. இக்கட்டிடத்தில் திருச்சி நகர மன்றம் (Town Hall) உள்ளது. இதன் பின் பகுதியில், மிக அருகில் நகர விடுதி உள்ளது. Town Hall (நகர் மன்றம்) இந்த அரண்மனை நாயக்கர் கால கலைச் சிறப்பிற்கு எடுத்துக் காட்டாக விளங்குகின்றது. அரண்மனையை அடுத்துள்ள நாயக்கர் அரசர்களின் கட்டிடங்களில் அரசு அலுவலகங்கள் உள்ளது.

**தாயுமானவ சுவாமிகள் கோவில்** நானும் மறுநாள் காலை, அதாவது 25-6-88 காலையில் 5.45க்கு உச்சிப்பிள்ளையார் கோவிலின் அடிவாரத்தை அடைந்து மலை அடிவாரத்திலுள்ள மாணிக்க விநாயகரை வணங்கினேன். பின் படிகளில் பாதிப்படியைக் கடந்தவுடன் தாயுமானவ சுவாமி கோவிலை அடைந்தேன் அங்கே இறைவன் லிங்க வடிவில் உள்ளார். அம்மன் பெயர் மட்டுவார் குழலம்மை. சுவாமி சன்னதி அம்மன் சன்னதிக்கு மேலுள்ளது. மாடிக் கட்டிடமாக உள்ளது குறிப்பிடத்தக்கது. கோவிலுள்ள நூற்றுக் கால் மண்டபம், சித்திரமண்டபம், பதினாறு கால் மண்டபம் ஆகியவை குறிப்பிடத்தக்கது சித்திர மண்டபத்திலுள்ள கல் தூண்கள் ஒரே கல்லில் ஆனவை. நூற்றுக்கால் மண்டபத்தின் (திருமண மண்டபம்) நடுவில் அழகிய சலவைக் கல் மண்டபத்தை கண்டேன். இறைவன் தாய் வடிவில் வந்து இரத்தினாவதி என்ற பெண்ணுக்கு மருத்துவ உதவி செய்தார் என்றும் வழி வழியாக கூறப்படுகின்றது. நூற்றுக்கால் மண்டபத்தின் எதிரிலுள்ள மண்டபத்தில் மீனாட்சி சுந்தரேசுவரர் ஆலயம் உள்ளது மலையின் உயரே தாயுமான சுவாமி சன்னதியிலிருந்து உச்சிப் பிள்ளையார் கோவிலுக்குச் செல்லும் வழியில் குடவரைக் கோவில் ஒன்றும் உள்ளது.

**உச்சி பிள்ளையார் கோவில்** மலையின் உச்சியிலுள்ள உச்சிப் பிள்ளையார் கோவிலை அடைந்ததும் உச்சிப் பிள்ளையாரை வணங்கி சிறிது நேரம் படிகளில் ஏறி வந்த களைப்புத் தீர அங்கே நின்று உடலுக்கு நலம் தரும் நல்ல காற்றை பெற்று மகிழ்ந்தேன். தாயுமானவ சுவாமி கோவிலில் இருந்து சிறிது உயரத்தில் உச்சிப்பிள்ளையார் கோவில் உள்ளது: உச்சிப் பிள்ளையார் கோவிலின் உயரம் 83 மீட்டர் என்று கூறப்படுகின்றது. உச்சிப் பிள்ளையாரை வணங்கி விட்டு மலை அடிவாரத்தை அடைந்தேன்.

**திருச்சி நகர விடுதி** பிள்ளையாரை வணங்கி விட்டு பின் திருச்சி நகரத்தார் சங்கச் செயலாளர் SP. அருணாசலம் செட்டியார் அவர்கள் வீட்டுக்குச் சென்றேன். அவரும் உள் அன்புடன் வரவேற்று கனிவுடன் பேசினார். பின் அவரிடம் விடை பெற்றுக் கொண்டு நகர விடுதியை அடைந்து விடுதியின் பொறுப்பாளர் அழ. கருப்பையா செட்டியார் அவர்களிடம் விடுதியைப் பற்றிய விபரங்களைக் கேட்டேன் அவர் தந்த விபரங்களை கீழே தந்துள்ளேன் திருச்சி நகர விடுதி உச்சிப் பிள்ளையார் கோவிலுக்கு அருகில் உள்ளது. Town Hall (நகர் மன்றம்)க்கு பின்புறம் மிக அருகில் உள்ளது.

முகவரி: 2, ஒத்தமால் தெரு(Town Hall பின்புறம்)
உச்சிப்பிள்ளையார் கோவில் அருகில் திருச்சி-2

**நகரத்தார்சங்கமும் நகர விடுதியும்:** திருச்சி நகரத்தார் சங்கம் 19,8ம் ஆண்டு தொடங்கப்பட்டது. திருச்சி நகரத்தார் சங்கம் செய்யும் கூட்டுத் திருமணங்கள் யாவரும் அறிந்ததேயாகும். இத்திருமணங்கள் 1985ம் ஆண்டு தொடங்கப்பட்டது. திருமணத்தில் சங்கத்தின் சார்பாக 3 பவுனுக்கு திருமாங்கல்யம், பெண்ணுக்கு பட்டுச்சேலை, மாப்பிள்ளைக்கு சரிகை வேட்டி பெண்ணுக்கு வெள்ளி மிஞ்சி ஆகியவை கொடுக்கப்படுகின்றது. காலை மாலை உணவும் சங்கத்தைச் சார்ந்தது இதுவரை 31 திருமணங்களை திருச்சி நகரத்தார் சங்கத்தார் பிள்ளையார்பட்டியில் சிறப்பாக நடத்தியுள்ளனர். வேலை வாய்ப்பு விரும்பும் இளைஞர்களுக்கு வேலை கிடைக்க துணை செய்கின்றது. முகவரி: நகரத்தார் சங்கம் 2. ஒத்தமால்தெரு, திருச்சி-2 நகர விடுதி: 1969ல் தொடங்கப்பட்டது. நகரத்தார் சங்க முகவரியே நகர விடுதியின் முகவரியும் ஆகும். நகர விடுதி உச்சிப்பிள்ளையார் கோவிலுக்கு அருகில் . Town Hall (நகர் மன்றம்)க்கு பின்புறம் மிக அண்மையில் உள்ளது. திருச்சி நகரப் பேருந்தில் ஏறி "மெயின் கார்டுகேட்" நிறுத்தத்தில் இறங்கி திருச்சி Town Hall எங்குள்ளது? என்று கேட்டு Town Hall [நகர் மன்றம் அருகே சென்று விட்டால், நகர விடுதி அதன் அருகில், அதன் பின் பகுதியில் உள்ளது. ஒருநாள் தங்க மகனை ரூ. 1.25, லாக்கருடன் ரூ 2.25 .(பூட்டு அவர்கள் பொறுப்பு) குடும்பத்துடன் வருபவர்களுக்கு தங்குவதற்கு தனிப்பட்ட அறை வசதி (பொது அறை) உண்டு. பெண்களுக்கு ரூ 2.00ம் ஆண்களுக்கு ரூ. 2.00ம் கட்டணம் ஆகும். குழந்தைகளுக்கு 10 வயது வரை கட்டணம் இல்லை. தண்ணீர் வசதி உண்டு. அருகில் தாயுமானவர் சுவாமி ஆலயம், மாணிக்க விநாயகர், உச்சிப்பிள்ளையார் கோவில் உள்ளது. பொருட்கள் வாங்க N.S.B. ROAD அருகில் உள்ளது. மிக அருகிலுள்ள ஊர்கள் திருவரங்கம், திருவானைக்காவல், வயலூர், சமயபுரம் ஆகியவைகளாகும்.

தற்போதைய நகரத்தார் சங்கத் தலைவர்:

லெ.நா. லெட்சுமணன் செட்டியார் அவர்கள்

| | | |
|---|---|---|
| துணைத் தலைவர் : | கே ஆர். கருப்பன் செட்டியார் | ,, |
| செயலாளர் : | SP. அருணாசலம் | ,, |
| துணைச்செயலாளர்: | KE. மெய்யப்பன் | ,, |
| பொருளாளர் : | V. சிதம்பரம் | ,, |

நகரவிடுதி பொறுப்பாளர் : அழ. கருப்பையா செட்டியார்

நகரவிடுதி பற்றி தகவல்கள் தந்தவர் அழ.கருப்பையா செட்டியார்

# நான் அறிந்த செய்திகள்.
## நம்மவரின் ஆலயப்பணிகள்.



திருவண்ணாமலை கோவில்

### செய்திகள் தந்து உதவியவர்கள்

1. பொற்கிழிக்கவிஞர் சொ.சொ.மீ.சுந்தரம், 2. AL.AR.MS நாராயணன் செட்டியார், தேவகோட்டை, 3. SP. K N. அண்ணாமலை செட்டியார் சிவகங்கை, 4. ராம.வ.ராமசாமி, சேலம், 5. சி.லெ.கரு, ஆதப்ப செட்டியார். ஒக்கூர்

''தமிழகத்திலுள்ள எல்லாக் கோவில்களிலும் நகரத்தார்களின் பங்கும் சேவையும் இல்லாத கோவில்கள் இல்லை எனக் கூறிவிடலாம்.''

– சிருங்கேரி சுவாமிகள்

நம்மவர்கள் செய்துள்ள ஆலயப்பணிகள் அளவற்றவை அதுபற்றி தனிப் புத்தகம் ஒன்றே வெளியிடலாம். சோம.லெ. அவர்கள் ''அலைகடலுக்கு அப்பாலும் நகரத்தார்களின் ஆலயப் பணிகள்'' என்ற நூலை எழுதியுள்ளார். அலைகடலுக்கு அப்பாலே அயல்நாட்டிலேயே ஏராளமான திருப்பணிகளை நம்மவர்கள் செய்துள்ளனர் என்றால் நமது நாட்டில் செய்துள்ள ஆலயப்பணிகள் எழுத வேண்டுமென்றால் பக்கம், பக்கமாக, பல புத்தகங்களாக எழுதிவிட முடியும். இங்கே நான் சேகரித்த, அறிந்த சில செய்திகளையே கீழே தந்துள்ளேன்.

சென்னையில்: சென்னை, மயிலையிலுள்ள அருள்மிகு கபாலீசுவரர் கோவில் திருப்பணிக்கு (1981-82ல்) ரூபாய் மூன்று லட்சம் கருமுத்து சொக்கலிங்கம் அவர்கள் கொடுத்துள்ளார்கள். சென்னையில் இராசா அண்ணாமலைபுரத்தில் டாக்டர் M.A.M. ராமசாமி அவர்களால் பலரின் ஒத்துழைப்புடன் செட்டிநாடு இல்லம் அருகில் சபரி மலையிலுள்ள ஐயப்பன் ஆலயம் போல் சுவாமி ஐயப்பன் ஆலயம் கட்டப்பட்டு சிறப்பாக நிர்வகிக்கப்பட்டு வருகின்றது, திருவொற்றியூரில் ஆண்டுதோறும் நம்மவர்களால் பட்டினத்தடிகள் பூசை சிறப்பாக நடத்தப்படுகின்றது.

திருவண்ணாமலையில்: காரைக்குடி S. N. A S A. அண்ணாமலை செட்டியார் அவர்கள் தலைமையில் அமைக்கப்பட்ட திருப்பணிக்குழு தனது பணிகளை நிறைவேற்றி 4-4—1976 அன்று திருக்குட நீராட்டு விழாவை சிறப்பாக நடத்தியது

சிதம்பரத்தில்: அரசர் அண்ணாமலை செட்டியார் அவர்கள் 1934ல் சிதம்பரம் அருள்மிகு கோவிந்தராசர் சன்னதியை திருப்பணி செய்து சம்பரோஷணம் செய்து வைத்தார்கள். தில்லை நடராசர் கோவிலுக்கும் நம்மவர்கள் குறிப்பிடத்தக்க அளவில் திருப்பணிகள் செய்துள்ளனர். சிதம்பரம் நடராசர் கோவில் திருப்பணிக்கு கருமுத்து சு. சொக்கலிங்கம் செட்டியார் அவர்கள் இரண்டு லட்ச ரூபாய் கொடுத்துள்ளார்கள்.

சேலத்தில்: சேலம் அருள்மிகு இராச கணபதி கோவிலில் சேலம் நகரத்தார்கள் 3½ லட்சம் ரூபாய் செலவில் சுற்றுப் பிரகாரம் அமைத்து பளிங்கு கற்களால் அழகு செய்து திருக்குட நந்நீராட்டு விழா நடத்தினார்கள். சேலம் அருள்மிகு சுகவனேசுவர சுவாமி ஆலயத் தக்காராக பூலாங்குறிச்சி திரு சொக்கலிங்கம் செட்டியார் அவர்கள் செயலாற்றி அவ்வாலயத்தில் பல நல்லபணிகள் செய்தனர் சேலம் நேரு நகரிலுள்ள அருள்மிகு கற்பகவிநாயகர் ஆலயம், சவகர் மில்ஸ் உரிமையாளர், பள்ளத்தூர் MA.PL. இராமனாதன் செட்டியார் அவர்கள், M A.PL. அண்ணாமலை செட்டியார், MA. PL. விவேகானந்தன் செட்டியார் அவர்கள் மற்றும் அனைத்து நகரத்தார் முயற்சியினால் இக்கோவில் கட்டி முடிக்கப்பட்டு 1—5—1988 குடமுழுக்கு விழா நடைபெற்றது.

தஞ்சை மாவட்டத்தில்: ஒக்கூர் சி கரு சி. லெட்சுமணன் செட்டியார் மன்னார்குடி வட்டம் பாமணி கிராமத்தில் அருள்மிகு அமிர்தநாயகி அம்பாள் சமேத அருள்மிகு நாகநாதர் ஆலயத்தை 6 லட்சம் செலவு செய்து 1935 செப்டம்பர் 15உ குடமுழுக்கு விழா நடத்தினார்.



மதுரை அருள்மிகு மீனாட்சியம்மன் ஆலயம்

அமராவதி புதூர் வயிநாகரம் (திரு நாகப்ப செட்டியார் திரு வெங்கிடாசலம் செட்டியார்) குடும்பத்தினரால், 1878ல் திருப்பணி செய்யப்பட்டது. முடிக்கப்பெறாமல் இருந்த மொட்டைக் கோபுரத்தை (வடக்கு கோபுரத்தினை) முழுக் கோபுரமாக்கி, திருப்பணி செய்தனர். ஆடி வீதியில் கல் தளம் பாவினர். சுவாமி சன்னதி முன்புள்ள கம்பத்தடி மண்டபம் 1871ல் அக்குடும்பத்து முன்னோர்களால் நிறைவு செய்யப் பெற்றது. மீனாட்சி அம்மன் கோயிலில் மேல ஆடி வீதியில் உள்ள கூ. க. அரு பசுமடம் (கீழப்பூங்குடி) 1924ல் அக்குடும்பத்தாரால் தொடங்கப் பெற்றது. நாள் தோறும் குறிப்பிட்ட அளவு பாலை மீனாட்சி அம்மனுக்கு கூ. க. அரு குடும்பத்தாருக்குரிய பசுமடம் வழங்கி வருகின்றது. அண்மைக்காலம் வரையில் மீனாட்சி அம்மன் கோவில் தக்காராக இருந்த V. N. சிதம்பரம் செட்டியார் அவர்களால் கல்யாண சுந்தரர் சன்னதி நிறுவப் பெற்றது. அவர் நிருவாக காலத்தில் தங்க ரதம் செய்யப் பெற்றது. கண்டரமாணிக்கம் லெ. நாராயணன் செட்டியார் அவர்கள் மீனாட்சி அம்மன் ஆலய அறங்காவலராக இருந்த காலத்தில் மீனாட்சி அம்மன் ஆலய குட நீராட்டு விழா சிறப்பாக நடை பெற்றது. இவரது நிருவாகத்தின் கீழ்

ஆலயம் இருந்த காலத்தில் அருள்மிகு மீனாட்சி அம்மனுக்கு தங்க கலசமும், வைர முடியும் செய்யப் பெற்றது மதுரை கூடலழகர் பெருமாள் கோயில் தாயார் சந்நிதி திருப்பணி தேவகோட்டை முத்து. கரு அழகப்ப செட்டியார் அவர்கள் மதுரைக்கு அருகேயுள்ள திருவேடக ஆலயத் திருப்பணி தேவகோட்டை சுப. சேவு. சேவுகன் செட்டியார் அவர்கள் மதுரை, திருப்பரங்குன்றத்திலுள்ள சரவணப் பொய்கையில் படித்துறைகளைக் கட்டி சோழபுரம் சுப.கண. அண்ணாமலை செட்டியார் குடும்பத்தினர் திருப்பணி செய்துள்ளனர். பழநி தண்டாயுதபாணி ஆலயத்தில் மகா மண்டபத்தில், இடது பக்கத்தில் நகரத்தார்களால் நிறுவப் பெற்ற விநாயகர், சுப்பிரமணியர் உள்ளனர்.

காமராசர் மாவட்டம் திருவில்லிபுத்தூர் ஒக்கூர் சி.கரு.சி.சித. சிந்தாமணி செட்டியார் என்ற சோமசுந்தரம் செட்டியார் அவர்கள் 1929ல் திருவில்லிபுத்தூரில் அருள் மிகு ஆண்டாள் கோவிலை ரூ. 6 லட்சம் செலவு செய்து திருப்பணி செய்தார் குறிப்பாக தங்க ஸ்வத்தம்பம் அவரது பெருங்கொடையால் நிறுவப்பெற்றது கோவில் தளத்தில் பதிக்கப்பட்டுள்ள கல்லில் சி. சித என்ற விலாசம் குறிக்கப் பெற்றுள்ளது. இவரது பேரர் ஆடிட்டர் அண்ணாமலை செட்டியார் பல நல்லபணிகளை, ஆலயப்பணிகளை செய்து வருகின்றார்.

தஞ்சை மாவட்டம் தொடர்ச்சி காவிரிப்பூம்பட்டினத்தி லுள்ள பல்லவனீச்சரக்கோயிலை அமராவதி புதூர் வயிநாகரம் குடும்பத்கினர் ஒரு லட்சம் செலவு செய்து திருப்பணி முடித்து 20—5—1900ல் திருக்குட நந் நீராட்டு விழாச் செய்தனர் அதே குடும்பத்தைச் சார்ந்த வெ. ராம. சோம. கருப்பஞ் செட்டியார் அவர்களும், இராமநாதன் செட்டியார் அவர்களும் மீண்டும் பழுதுபார்த்து செப்பனிட்டு 20—8—1958ல் திருக்குட நீராட்டு விழாச் செய்தனர். இவ் ஆலயத்தின் உட்புறமுள்ள பட்டினத்தார் திருக் கோவிலை தேவகோட்டை சேவு. லெ. லெ குடும்பத்தாரும், சேவு. லெ, ராம நா குடும்பத்தாரும் திருப்பணி செய்து திருக்குட நீராட்டு விழா செய்தனர்.

புதுக்கோட்டை மாவட்டம் வேந்தன்பட்டியில் உள்ள மீனாட்சி-சொக்கலிங்கம் ஆலயம் நகரத்தார்களால் கட்டப்பட்டு 18—5—1983ல் குடமுழுக்கு விழா நடை பெற்றது. இங்கிருந்து கோட்டையூருக்கு பிள்ளைபோன அழ. சிதம்பரம் செட்டியார் அவர்கள் இக் கோவிலுக்கு பெருந் தொகையை நன்கொடையாககொடுத்துள்ளார்கள். இக்கோவிலிலுள்ள நந்தி புகழ் பெற்றது. இம்மாவட்டத்தில் இன்னும் பல கோவில்கள் நகரத்தார்களால் திருப்பணி செய்யப்பட்டுள்ளது.

# பசும்பொன் முத்து இராமலிங்கம் மாவட்டம்



அருள்மிகு வைரவன்கோவில்

பிள்ளையார்பட்டி காரைக்குடிக்கு அண்மையிலுள்ள பிள்ளையார்பட்டி நகரக் கோவில்கள் ஒன்பதில் ஒன்றாகும். நம்மவர்கள் குடவரைக் கோவிலின் வாயிலில் மதில் எடுத்து கதவு அமைத்துள்ளனர். விநாயகப் பெருமானுக்கும் மகா தேவருக்கும் விமானங்கள் அமைத்துள்ளனர். சுமார் 60 ஆண்டுகளுக்கு முன்பு தற்பொழுது காணப்பெறும் அளவிற்கு கோவிலைப்புதுப்பித்து திருப்பணி செய்து சிறப்பித்து உள்ளனர். பிள்ளையார் ஊருணியை வெட்டி கட்டியுள்ளனர். அலங்காரமண்டபம், மருதீசர் கோபுரம், இராசகோபுரம் ஆகியவற்றை அமைத்தனர். பிள்ளையார்பட்டிக்கு அண்மையிலுள்ள வயிரவன் கோவிலும் நகரக் கோவில்கள் ஒன்பதில் ஒன்றாகும். கண்டனூர் அ. நா. குடும்பத்தைச்சேர்ந்த நா. அ. வெ. ராம இராமசாமி செட்டியார் அவர்கள் இக் கோவில் கட்டிடங்கள் உருவாகுவதற்கு பெரிதும் காரணமானவர். முதல் திருக்குட நீராட்டுவிழா 27—4—1894ம், பின் 1919, 1928, 1959 ஆகிய ஆண்டுகளிலும் திருக்குட நன் நீராட்டு விழாக்கள் நடந்தது. 31—1—1982லும் திருக்குட நன்நீராட்டு விழா நடைபெற்றது.

குன்றக்குடி ஆத்தன்குடி செட்டியார் அன்னதானமடம் கார்த்திகை தோறும் அன்னதானம் வழங்கும் நகரத்தா மடங்கள், நகரத்தார்களால் பழநி ஆண்டவரின் வேல் வைத்து பூசை செய்யும் கோவில், அதைச் சார்ந்த அன்ன தான மடமும் உள்ளது. காரைக்குடியில் கொப்புடையம்மன் ஆலயமும், நகரச்சிவன் கோவிலும் நகரத்தார்களின் திருப்பணியால் பொலிவு பெற்று சிறப்புடன் உள்ளது.

தேவகோட்டை நகரத்தார்களால் கட்டப்பட்ட நகரச்சிவன் கோவில் குட நீராட்டு விழாக்கள் முறையே 1888, 1916, 1925, 1942, 1958, 1968 ஆகிய ஆண்டுகளில் நடைபெற்றது. பள்ளத்தூர் நகர சிவன் கோவில் கட்ட இடம் கொடுத்தவர்கள் அ. மு மு குடும்பத்தார். இவ் ஆலயத்தில் குட நீராட்டு விழாக்கள் முறையே 1913, 1931, 1939, 1956, 1973ம் ஆண்டுகளில் சிறப்பாக நடைபெற்றது.

சோழபுரம் ஒக்கூர் சி. கரு சிவகையருக் குடும்பத்தார் சோழபுரத்திலுள்ள அருள்மிகு அருள்மொழிநாத சுவாமி கோவிலை திருப்பணிசெய்து சுமார் 80 ஆண்டுகளுக்குமுன்பு குடமுழுக்கு விழா செய்தனர் 1934 35ல் மேற்கண்ட சிவன் கோவில் இராச கோபுரத்தை ஒக்கூர் சி. கரு. சி. கரு குடும்பத்தார் கட்டி குடமுழுக்குவிழா செய்தனர்.

கீழப்பூங்குடி சிவன்கோவிலை கூ வகையருக்கள் குடும்பத்தாரும், தீ வகையருக்கள் குடும்பத்தாரும் சேர்ந்து திருப்பணிகள் செய்தனர் மேற்படி கோவிலில் சுப்பிரமணியர் கோவில் திருப்பணியை மட்டும் சோழபுரம் சுப. க. அ குடும்பத்தார், சுப.கண.அண்ணாமலை செட்டியார் குடும்பத்தார் சுப. க .சித. ராம குடும்பத்தார் ஆகியமூன்று குடும்பத்தாரும் சேர்ந்து திருப்பணி செய்தனர்.

நாட்டரசன்கோட்டை அருள்மிகு கண்ணாத்தாள் ஆலயம் கட்டும்பொழுது இவ்வூர் நகரத்தார்கள் கீழப்பூங்குடி திருமலையில் இருந்து கல் கொண்டுவந்து கட்டினார்கள். இக்கோவிலின் கண் காணிப்பாளராக சுமார் 30 வருடங்கள் ஆவி. சித. ஆவிச்சி செட்டியார் அவர்கள் இருந்தார்கள். தற்பொழுது சத்திரம் கண்ணப்பசெட்டியார் மகன் இராமசாமி செட்டியார் அவர்கள் கண் காணிப்பாளராக உள்ளார்.

மதகுபட்டி இவ்வூரிலுள்ள மாணிக்க விநாயகர் கோவில் அலவாக்கோட்டை சி. அரு. வகையறாவும், அவர் பங்காளிகளும் சேர்ந்து கட்டியது ஆகும் சந்தான கோபால கிருட்டிண பெருமாள் கோவில் சுப. லெ. ராம. ராமசாமி செட்டியார் அவர்களால்உருவாக்கப்பட்டது.

கொல்லங்குடி அழாகாபுரி உ.தெ.மெ. மெய்யப்பசெட்டியார் அவர்கள் கொல்லங்குடி வெட்டுடையார் காளியம்மன் திருக்கோவிலைத் திருப்பணி செய்து திருக்குட நீராட்டுச்செய்தார்கள்.

காளையார்கோவில்: காளையார்கோவில் அருள்மிகு சொர்ணகாளீசுவரர் கோவிலை தேவகோட்டை AL. AR (சமீன்தார்) அவர்களும், திண்ணப்ப செட்டியார் அவர்

களும் திருப்பணி செய்து 1959 நவம்பர் 11ல் திருக்குட நந்
நீராட்டு விழா செய்தார்கள். தேவகோட்டை சமீன்தார்
குடும்பத்தார் (அள. அரு. சுப்பையா செட்டியார், தேவ
கோட்டை சமீன்தார், காளையார்கோவில் கட்டளை டிரஸ்டி)
காளையார்கோவில் வைகாசித் திருவிழா 4ம் திருநாள், 7,
9, 10ம் திருநாள் மண்டகப்படிகளை சிறப்புற நடத்தி வரு
கின்றார்கள். ஒக்கூர் சி கரு. ஆ. கண. குடும்பத்தினர்
சௌந்திர நாயகி அம்மன் கோவிலை திருப்பணி செய்து
குடமுழுக்கு நந்நீராட்டு விழாச் செய்தனர். சோழபுரம் சுப.
க. அ குடும்பத்தார் சுகந்தவனப் பெருமாள் கோவில் கட்டி
திருப்பணிகள் செய்தனர். சோழபுரம் சுப. க அ சித. ராம
குடும்பத்தார் காளையார்கோவிலில் வேத பாட சாலை
அமைத்துள்ளனர், கொ. அழகாபுரி உ. தெ.மெ. மெய்யப்ப
செட்டியார் அவர்கள் காளையார்கோவிலில் ருக் வேத பாட
சாலையை ஏற்படுத்தி பல ஆண்டு காலம் நடத்தினார்கள்
கொ. அழகாபுரி க. மெ. உ. குடும்பத்தினர் (அம்பலகாரச்
செட்டியார் வீடு) காளையார் கோவிலில் சாம வேத பாட
சாலை நிறுவி, காளீசுவரருக்கு சுவர்ண அங்கி முதலியன
செய்தார்கள்.

திருப்பூவணம் தேவகோட்டை உ. மு குடும்பத்தினர்
திருப்பூவணம் திருப்பூவணநாதர் கோவிலை திருப்பணி
செய்துள்ளனர்.

இராமநாதபுரம் மாவட்டம் (இராமேசுவரம்) தேவகோட்டை
AL. AR அருணாசலம் செட்டியார் அவர்கள் இராமேசுவரர்
ஆலயத்தில், இரண்டாம் சுற்றிலுள்ள கீழ ராசகோபுரத்தை
கட்டி முடித்தார்கள். சுற்றுப்பிரகாரமும் அக்குடும்பத்தின
ரால் சீர் செய்யப்பெற்றது. சோழபுரம் சுப கண.(சிங்கப்பூர்
அண்ணாமலை செட்டியார் குடும்பத்தினர்) வழியினர்
இராமேசுவரம் கோவிலுக்குள் சுமார் 90 ஆண்டுகளுக்குமுன்
நந்தவனம் அமைத்து இன்றும் சிறப்புடன் நடத்தி வரு
கின்றார்கள். உப்பூர் விநாயகர் கோவில் தேவகோட்டை
சமீன்தார் குடும்பத்தாரால் கட்டப்பட்டது. திருவாடானை
கோவில் தேவகோட்டை ரெட்டை அரு. குடும்பத்தாரால்
திருப்பணி செய்யப்பட்டது. திருச்சுழி சிவன்கோவிலை தேவ
கோட்டை தீ. அ. சு. குடும்பத்தாரால் திருப்பணி செய்யப்
பட்டது. திரு உத்தரகோசமங்கை மங்களேசுவாமி கோவில்
தேவகோட்டை அழ. சித லெ. இராம குடும்பத்தினரால்
திருப்பணி செய்யப்பெற்றது.

| | | |
|---|---|---|
| ஒக்கூர் | சி.லெ. சோமசுந்தரம் குமாரர் சி.லெ. சோமசுந்தரம் என்ற ஆதப்ப செட்டியார் | தஞ்சைமாவட்டம் மன்னார்குடி வட்டம் பாமணியிலுள்ள அருள்மிகு அமிர்த நாயகி அம்பாள் நாகநாதர் திருக்கோவிலின் அறங்காவலராக இருந்து 1960ம் வருடம் சூன் மீ 30உ இரண்டாவது குடமுழுக்கு நீராட்டு விழா செய்தார். |
| ஒக்கூர் | சி.லெ. லெட்சுமணன் செட்டியார் அவர்கள் பாமணியில் ஆலயம் கட்டியது மட்டுமின்றி அருள்மிகு நாகநாத சுவாமிக்கு வெள்ளி நாகாபரணமும் அம்பாளுக்கு கவசமும் மற்ற பொன் நகைகளும் செய்து வைத்துள்ளார். | மேற்படி லட்சுமணன் செட்டியார் அவர்கள் திருக்காரவாசலில் யசுர் வேத பாட சாலையை நிறுவினார். மேற்படி குடும்பத்தினர் மேற்படி திருத்தலத்தில் வைகாசித் திருவிழாவில் வெள்ளி ரிஷப வாகன மண்டகப்படியை நடத்தி வருகின்றார்கள். |
| தேவகோட்டை | திருவேடகம் | உ. ராம.மெ சு. குடும்பத்தினர் |
| தேவகோட்டை | மயிலாடுதுறை | அழ.வீர.பெ. குடும்பத்தினர் |
| ,, | திருக்காரயில் | முத்து.கரு. குடும்பத்தினர் |
| ,, | திருவிடைமருதூர் | மெ.லெ.மெ குடும்பத்தினர் |
| ,, | திருநெல்லிக்கா | கு.ம.கரு. ,, |
| ,, | திருவாரூர் | சத்திரம் சோம. ,, |
| ,, | வேதாரண்யம் | பழ. சோம. சோமசுந்தரம் செட்டியார் அவர்களால் திருப்பணி செய்யப்பெற்று ஸ்ரீமுக வருடம் ஆனிமீ குடமுழுக்கு விழா நடைபெற்றது |

| | | |
|---|---|---|
| ,, | வேதாரண்யம் அருகிலுள்ள கோடிக்குழகர் | இவ் ஆலயத்தை சோமசுந்தரம் செட்டியார் திருப்பணி செய்து 1941 சூலை [விசு ஆண்டு ஆனி 21உ குடமுழுக்கு விழா செய்வித்தார் |
| பாகனேரி | வேதாரண்யம் | பெரி. அழ. மு.மு. குடும்பத்தினர் வேதாரண்யத்தில் சத்திரம் போட்டுள்ளார்கள் |
| ,, | திருக்களர் | திருக்களரில் தேவாரப்பாடசாலையை மேற்படி பெரி. அழ. மு.மு. குடும்பத்தாரும் காரைக்குடி முத்து. அரு. சா. குடும்பத்தாரும் சேர்ந்து அமைத்து நடத்தி வருகின்றார்கள் |
| காரைக்குடி | ,, | |
| தேவகோட்டை | திருவையாறு | உ.ராம.மெ.சுப.சே.மெ. குடும்பத்தினர் |
| ,, | திருவெண்காடு | மு.ராம.சுப. குடும்பத்தினர் |
| ,, | உறையூர் | சித. முரு. குடும்பத்தினர் |
| ,, | வைகல்கோவில் | AL.AR. குடும்பத்தினரால் வைகல் கோவில் கட்டப்பட்டது |
| மற்றவிவரங்கள் | திருக்குற்றாலம் - குற்றாலநாதர் கோவில் நெல்லை (கட்டபொம்மன் மாவட்டம்) | தேவகோட்டை வி. கரு சித &- பி. ச. அரு. அரு |
| காஞ்சிபுரம் | (செங்கை மாவட்டம்) | - தேவகோட்டை லெ லெ ராம. |
| திருக்கோயிலூர் | ,, ,, | ராம. மெ. சித |
| திருக்களாத்தி | ,, ,, | ரா. மெ. சித |
| திருக்கோலக்கா | ,, ,, | மெ. அரு. ராம |
| அகத்தியன் பள்ளி | ,, ,, | பழ. சோம |

# தெரிந்த பெயர், தெரியாத விபரம்

## (பெயருக்கு காரணம் என்ன?)

இராசகுமாரி செந்தமிழன்
சிவகங்கை

1) வங்கி (Bank) வங்கியை ஆங்கிலத்தில் பேங்க் என்று சொல்லுகிறோம். பேங்கோ (Banko) என்ற சொல்லின் சுருக்கமே பேங் ஆகும். பதினேழு, பதினெட்டாம் நூற்றாண்டில் வட்டிக்கு கடன் கொடுத்த வியாபாரிகள் நாற்காலிகளில் அமர்ந்து தாங்கள் முன்புறம் இருந்த மேசைகளில் பணத்தை வைத்திருந்து, கொடுக்கல் வாங்கல் செய்து வந்தார்கள் அந்த மேசை. நாற்காலிகளின் பெயர் பேங்க்கோ எனப்படும். அந்த அடிப்படையில் உருவான சொல் தான் பேங்க் என்ற சொல்.

2) ஃபரன்ஸ் (France) ஃப்ரான்சு நாட்டிற்கு அப்பெயர் வரக்காரணம் என்ன? முதலில் அந்தநாட்டின் பெயர் கால் (Gaul) நாடு என்பது ஆகும். அங்கே வாழ்ந்தவர்கள் கால் என்ற மக்கள். கி பி 395ல் ரைன் நதியின் கீழ்பகுதியில் வசித்து வந்த ஃப்ராங்ஸ் என்ற இனத்தவர் கால் இனத்தவரை வென்று தாங்கள் ஆட்சியை நிறுவினார்கள். அது முதல் அந்நாடு ஃப்ரான்ஸ் என்று பெயர் பெற்றது.

3) ஹாக்கி (Hockey) ஹோ கீ என்ற சொல்லில் இருந்து வந்தது தான் ஹாக்கி என்ற பெயர் ஹோ-கீ என்றால் செவ்விந்திய மொழியில் “பலமான அடி” என்று பொருள். செவ்விந்தியர்கள் பந்தை அடித்து விளையாடும் பொழுது ஹோ-கீ (Ho-Kee Ho.Kee) என்று உரக்கக்கத்து வார்கள். அந்த ஹோ-கீ விளையாட்டு தான் பிற்காலத்தில் ஹாக்கியாக மாறியது.

4) பி. எல். 480 (P.L.480) அமெரிக்கா ஐக்கிய நாடுகளின் சட்ட மன்றம் 1954ல் இயற்றிய ஒரு சட்டம் தான் P.L. 480 அதன் முழுப் பெயர் பப்ளிக் லா (Public law) 480.

5) ஸ்லிப்பர் (Sleeper) நார்வே மொழியில் ஸ்லிப் (Sleep) என்றால் பளுவான பொருட்களை சுலபமாக இழுத்து செல்ல வசதியாக அமையும்படி பாதை செப்பனிட பயன் படும் சாதனம் என்று பொருள். அதே போல்;ரயில் பாதையைக் கெட்டிப்படுத்த தண்டவாளங்களுக்கு கீழே பொருத் தப்படும் டிரக் கட்டைகளுக்கு ஸ்லிப்பர் என்று பெயர் வைக்கப்பட்டது.

6) பேனுக் கத்தி சிறிய மடக்கு கத்தியின் பெயர் பேனுக்கத்தி. முற்காலத்தில் இறகு முனையை கூராகச் சீவி மையில் தொட்டு எழுதினர்கள். முனை மழுங்கியோ, உடைந்தோ போனல் சீவிக் கூராக்க சிறிய மடக்குக் கத்தி உதவியது. பேனுவை கூராக்க உதவிய கத்திக்குப் பேனுக் கத்தி எனப் பெயர் வந்தது.

7) கேலண்டர் முற்காலத்தில் ரோம் நகரில் ஒவ்வொரு மாதமும் முதல் நாளன்று அரசாங்கப் பணியாள் ஒருவன் தெருத் தெருவாகச் சென்று மாதப் பிறப்பையும், அம்மாதத்தில் வரும் விசேட நாட்களையும் உரக்கக் கூவி மக்களுக்கு அறிவிப்பான் அவ்வாறு அறிவிப்பதை ரோம் மொழியில் (calo) என்பார்கள். கேலண்ட்ஸ் (calends) மணிகள், நாட்கள், வாரங்கள், மாதங்கள் என காலத்தை பிரிக்கும் முறை என்ற பொருளுடைய சொல்லாகும். கேலேன்ஸ் என்ற சொல்லே பின்னர் கேலண்டர் என்று மாறியது.

8) பாய்காட் (Boycott) அயர்லாந்தில் மேயோ பகுதியில் கேப்டன் பாய்காட் என்ற நிலச் சுவான்தார் தனது பண்ணையாட்களை கொடுமைப்படுத்தி வேலை வாங்கி வந்தார். அதனல் பண்ணையாட்கள் சங்கம் பாய்காட்டுக்கு எதிராக தீர்மானம் நிறைவேற்றி அவரது கட்டளைகளைப் புறக்கணித்தது அது முதல் ''பாய்க்காட்'' என்ற சொல் ''விலக்கி வைத்தல்'' என்ற பொருளில் வழங்குகின்றது.

9) ஆஸ்பெஸ்டாஸ் (Asbestos) கல்நார் என்ற தீப்பிடித்து எரியாத பொருளுக்கு ரோமனிய மொழியில் ஆஸ்பெஸ்டாஸ் என்று பெயர் என்றும் ''அணையாத ஒளி'' என்பது அதன் பொருள். இன்னெரு காரணம் ரசியாவில் யூரல் மலைப்பகுதியில் ஆஸ்பெஸ்ட் என்னும் இடத்தில் கல்நார் கிடைப்பதால் ஆஸ்பெஸ்டாஸ் எனப் பெயர் வந்தது என்றும் கூறுவார்கள்.

10) பேக்லைட் (Bakelite) பேக்லைட் என்பது பிளாசுடிக்கைப் போன்ற ஆனல் பிளாசுடிக்கை விடக் கடினமான பொருள். பேக்லைட்டைக் கொண்டு வானெலி பெட்டி தயார் செய்யப்படுகின்றது. இதனைக் கண்டு பிடித்தவர் அமெரிக்காவைச் சார்ந்த பேக்லேண்ட் பெல்க் என்பவர் (Bakeland Belg ) கண்டுபிடித்த ஆண்டு 1907.

11) ஹெர்ட்ஸ் (Herts) வானொலியில் மீட்டர்களைக் குறிப்பிடும் பொழுது இத்தனை கிலோ ஹெர்ட்ஸ் என்று கூறு கின்றோம். ஒலி அலையின் வேகத்தைக் குறிப்பிடும் பெயர் இது. செர்மனியைச் சார்ந்த ஹின்ரீச் ஆர்ஹெர்ட்ஸ் என்னும் விஞ்ஞானி காற்றில் மின்காந்த அலைகள் பரவும் வேகச் சக்தியைக் கண்டுபிடித்து அச்சக்தியை வானொலிக்குப் பயன் படும்படி ஆராய்ச்சி செய்து பயனுறச் செய்ததால் அந்தஒலி அலையின் வேகத்திற்கு ''ஹெர்ட்ஸ்'' என்று அவர் பெயர் வைத்தார்கள். அவ்வொலி அலையின் வேகத்தை கிலோ மீட்டர் அளவில் கணக்கிட்டு ''கிலோ ஹெர்ட்ஸ்'' எனப் பட்டது.

11) காக்கி காக்கி என்பது உருது சொல் உருது மொழியில் காக்கி என்றால் புழுதி என்று பொருள். அதனுல் புழுதி நிறத்தில் உள்ள துணியை அராபியர் காக்கித் துணி என அழைத்தனர். அதையே நாமும் சொல்லுகின்றோம்.

13) பைஜாமா (Pyjama) 'பைஜாமா' என்பது பராசீகச் சொல். பாரசீக மொழியில் பை என்றால் கால் ஜமாக் என்றால் துணி. காலுக்கு அணியும் துணி தான் பைஜாமாக், மைஜாமக் என்ற சொல் பின் பைஜாமா என்று சுருங்கி விட்டது.

14) கேலிக்கோ புத்தகங்களை பைண்ட் செய்ய உதவும் துணி கேலிக்கோ. இது கேரளாவிலுள்ள கேலிக்கட் (Calicat) என்னும் ஊரில் அதாவது கள்ளிக் கோட்டையில் இவ்வகைத் துணி முதன் முதலாகத் தயாரிக்கப்பட்டது. அதன் காரணமாக இது 'கேலிக்கோ' எனப் பெயரைப் பெற்றது.

15) ரூபாய் (Rupee) முன்காலத்தில் ரூபாய் தூய வெள்ளியில் இருந்தது வெள்ளிக்கு உருது மொழியில் ரூப்யம் என்று பெயர். அதனுல் வெள்ளியிலான அந்த நாணயத்திற்கு மொகலாய மன்னர் ரூப்யா எனப் பெயரிட்டார். அதன் அடிப்படையில் ரூபாய் எனப் பெயர் வந்தது.





இளையாற்றக்குடி கோவில்

## நகரக் கோயிற் பதிகம்.

தருமபுர ஆதீன வித்வான், சித்தாந்தப்புலவர் மாமணி, பாலகவி. வயிநாகரம் வே, இராமனாதன் செட்டியார் அவர்கள்

### காப்பு

1 மருதங் குடிப்பதி வாழ்முத லைத்தன வைசியர்கள்
ஒருதங் குடிக்கிறை என்றுகொண் டாடும் உயர்பரனைத்
திருதங்கு மார்பினன் நான்முகன் ஆதிய தேவரெல்லாம்
சுருதங்க ளாற்றுதி கற்பக மூர்த்தி துணை நமக்கே

### இளையாற்றகுடி

2. திருமகள் நாமகள் சேர்ந்து தினம்பணி செய்திறைஞ்சுப்
பெருமை தருநித்ய கல்யாணி பங்கினன் பேணுபவர்க்(கு)
இருமையு மின்பருள் கைலாய நாதன் இளசை நகர்த்
தரும வணிகர்க் கரணும் பராபரன் தாள்பணிவாம்

## மாற்றூர்

3. வேற்றூர் களிற்சென்று பலகால் முயன்றதில் வெற்றி யின்றித்
தோற்று வருந்தி கொங்கணர் நெஞ்சத் துயரொழித்துச்
சாற்றும் வணிகர்க் கிறையாய் பெரியதாய் தன்னெடுற்ற
மாற்றூரைஞ் ஞாற்றிறை மாமலர்ப் பாதங்கள் வாழ்த்துவமே

## வயிரவன் கோயில்

4. மயிலெனுஞ் சாயல் வடிவுடையம்மை மகிழ் கொழுநன்
தயிரிய மிக்க வடுகத் திருமேனி தாங்கி நிற்போன்
உயிரெனச் சைவத்தைப் பேணும் வணிகர்க் குவந்தபதி
வயிரவன் கோயில் வளரொளி நாதனை வந்திப்பமே.

## இரணிக் கோயில்

5 வாட்கொண்ட கண்ணி சிவபுரத் தாயை மணம்புரிந்து
தாட்கொண்டு நாளும் வணங்கும் வணிகர் தமக்கருள் வான்
நாட்கொண்ட நோயிலா வாழ்வுடன் செல்வங்கள் நல்கு மெங்கள்
ஆட்கொண்ட நாதன் இரணியூர் அத்தன் அடிபணிவாம்.

## பிள்ளையார்பட்டி

6 பீடாரும் பிள்ளையார் பட்டித் திருநகர் பேணியுறை
வாடா மலர்மங்கை மாமரு தீசர் மலர்க்கழலே
ஏடார் குழற்சிவ காமி திருவீசர் இன்பதமே
ஈடாருமில்லா வணிகர் தினம்பணித் தேத்துவரே.

## நேமம்

7. காமனைக் காய்ந்து சவுந்தர நாயகி கைப்பிடித்த
நேம நகரில் செயங்கொண்ட சோழீச! நீடுசெல்வச்
சேம வணிகர்க்கோர் வைப்பா யிலங்குஞ் சிவபரனே!
சாமி யுனது திருவடிச் சார்பின்றிச் சார்பிலமே.

## இலுப்பைக்குடி

8. வந்திருந்து வாழ்த்தும் வணிகர் மரபு வளம்பொலியச்
சிந்திப் பவர்க்கருள் செய்யிலுப் பைக்குடிச் சீர்ப்பதியில்
கந்தக் குழலி சவுந்தர நாயகி காதலுறும்
எந்தையைத் தான்றோன்றி யீசனைத் தேசனை யேத்துவமே.

## சூரைக்குடி

9. நாரைக்கு முத்தி நலந்தந்த நாயகி நானிலத்தில்
சூரைக் குடிப்பதி யாவுடை யன்னை துல்லவியெனச்
சாரப் புகழ்புரி சைவன் வணிகர் தமக்கிறைவன்
காரைப் புரைகளத் தேசிக நாதன் கழல்பணிவாம்

10. காமாட்சி யம்மைக்குக் காதலன் மாலுக்கு நான்முகற்கும்
தாமாட்சி நல்கிய தந்தை தனக்குத்தாய் தந்தையிலான்
மேமாட்சி மன்னிய வேலன் குடிக்கிறை மெய்வணிகர்
தாமாட் படவாழும் கண்டீசர் பாதம் சரணமக்கே

பாடல்கள் தந்து உதவியவர்

AVM பழநியப்ப செட்டியார்
காரைக்குடி.

## திருநீறு அணியும் முறை.

நன்றி – செயலட்சுமி விளம்பர நிறுவனம்
24, பந்தடி குறுக்குத் தெரு,
மதுரை – 625 001

பக்தியொடு சிவ சிவா என்று திருநீற்றைப்
பரிந்து கையால் எடுத்துப்
பாரினில் விழாதபடி அண்ணாந்து செவியோடு
பருத்த புயமீது ஒழுக
நித்தமும் விரல்களால் நெற்றியில் அழுந்தல்உற
நினைவாய்த் தரிப்பவர்க்கு
நீடுவினை அணுகாது தேக பரிசுத்தமாம்
நீங்காமல் நிமலன் அங்கே
சக்தியோடு நித்தம் விளையாடுவன் முகத்திலே
தாண்டவம் செய்யும் திரு
சஞ்சலம் வராது பரகதி உதவும் இவரையே
சக்திரும் சிவன் என்னலாம்
மத்தினிய மேரு என வைத்து அமிதினைக் கடையும்
மால் மருகனான முருகா
மயிலேறி விளையாடும் குகனே புல்வயல் நீடு
மலைமேவு குமரேசனே

— குருபாத தாசர்

திருநீற்றின் மகிமை: பூதி என்றால் ஐசுவரியம். வி என்றால் இல்லை. விபூதிக்கு மிஞ்சிய ஐசுவரியம் இல்லை என்பது இதன் பொருள். நீரில்லா நெற்றி பாழ். விபூதி அணிவதால் கதிரவனின் வெப்பம் நெற்றியில் தாக்கி பல நோய்கள் நம்மை தாக்காமல் காப்பாற்றுகிறது.



# திருவிளக்கின் சிறப்பு

-- விசாலாட்சி, சென்னை-53

வெள்ளி, பஞ்சலோகத்தால் செய்யபட்ட விளக்குகள், மண்ணால் செய்யப்பட்ட விளக்குகள். ஐந்துமுக விளக்குகள் ஆகிய விளக்குகள் வழிபாட்டிற்கு உரிய விளக்குகளாகும் காலை 4 மணியிலிருந்து 5 மணிக்குள் தீபம் ஏற்றி வணங்குவது மிகப் பயன்தரும். மாலையில் தீபம் ஏற்றி வணங்கினால் மகாலட்சுமியின் அருள் கிடைக்கும். கிழக்கு திசையில் விளக்கு ஏற்றி வழிபட்டால் துன்பம் நீங்கும். மேற்கு திசையில் விளக்கு ஏற்றி வழிபட்டால் சனிப்பீடை நீங்கும். வடக்கு திசையில் விளக்கு ஏற்றி வணங்கினால் திரண்ட செல்வம் உண்டாகும். தெற்கு திசையில் விளக்கு ஏற்றி வழிபடக்கூடாது. நெய்யை ஊற்றி விளக்கு ஏற்றினால் வீட்டில் நன்மை ஏற்படும். நல்ல எண்ணெய் ஊற்றி விளக்கு ஏற்றினால் பீடைகள் தொலையும். விளக்கு எண்ணெய் ஊற்றி விளக்கு ஏற்றினால் அன்பு, புகழ், வாழ்க்கையில் பல நலன் ஏற்படும் கடலை எண்ணெயில் விளக்கு ஏற்றக்கூடாது. திரி ஒருமுகம் ஏற்றுவது மத்திமம், இரண்டு முகம் குடும்ப ஒற்றுமை, மூன்றுமுகம் புத்திரசுகம், நான்கு முகம் பசு, பரி இனத்தை தரும். ஐந்துமுகம் செல்வம் தரும்.

---

உங்களுக்குத் தெரியுமா? — செந்தில்நாதன், அம்பத்தூர் சென்னை

1. சென்னை மாநில சட்டசபையில் முதன்முதலாக தமிழில் பேசியவர் யார்?
   சேலம் வி.பி. நரசிம்மன் அவர்கள்
2. இடிதாங்கியில் உள்ள உலோகம் எது?
   செம்பு
3. சுபாசுசந்திரபோசின் உரிமை அரசு நிறுவப்பட்ட நாள் எது?
   21—10—1943
4. உலகத்தில் பரப்பில் இந்தியா பெறும் இடம் என்ன?
   [1] ருசியா [2] கனடா [3] சீனா [4] அமெரிக்கா [5] பிரேசில் [6] ஆசுதிரேலியா [7] இந்தியா
5. முதன்முதலில் பெண்களுக்கு வாக்குரிமை அளித்த நாடு எது?
   நியூசிலாந்து



நல்ல பணிக்கு ஊக்க முும், உற்சாகமும் தரும் நாடறிந்த ஸ்ரீவிசாலம்சிட்பண்டு நிருவாக இயக்குநர் RM. அருணாசலம் அவர்கள்.

எனது சகோதர மக்கட்கு யான் உதவுவேனாக!
நான் தேடுவதெல்லாம் இதுவே
— சுவாமி விவேகானந்தர்

சுவாமி விவேகானந்தர் அவர்களின் இந்தப் பொன் மொழி ஸ்ரீ விசாலம் சிட்பண்ட் நிருவாக இயக்குநர் RM. அருணாசலம் அவர்களுக்கு நூற்றுக்கு நூறு பொருந்தும். நான் பள்ளத்தூருக்கு அவரைப் பார்க்க இருமுறை சென்றேன், பார்க்க முடியவில்லை. மேலாளர் இனியவர் PR. லட்சுமணன் அவர்களைத்தான் பார்த்தேன். அவரும் இனிது வரவேற்று, பள்ளத்தூரைப் பற்றியும், நிருவாக இயக்குநர் RM. அருணாசலம் அவர்களைப் பற்றியும் பல விபரங்களைச் சொன்னார். பிறகு கடிதங்கள் தான் எழுதினேன். ''நகரத்தார் இதழுக்கு'' தொடக்கத்திலிருந்தே தொடர்ந்து விளம்பரம் தந்து "நகரத்தார் இதழ்'' வளர்ச்சிக்கு ஊக்கம் கொடுத்தார். புதிய இதழ் தொடர்ந்து நடத்துவாரா? இடையில் இதழை நிறுத்தி விடுவாரா? என்று எல்லாம் எண்ணாமல் ஆறு மாத விளம்பரத்தையும், அதற்குரிய கட்டணத்தையும் அஞ்சல் வழியே அனுப்பி எனக்கு ஊக்கமும், உற்சாகமும் கொடுத்த அந்த நல்லவர் (ஸ்ரீ விசாலம் சிட்பண்ட் நிருவாக இயக்குநர் RM. அருணாசலம் அவர்கள்) பற்றி நான் அறிந்த விவரங்களை கீழே எழுதியுள்ளேன்.

தந்தை : AR. இராமசாமி செட்டியார் அவர்கள்

தாயார் : RM. மெய்யம்மை ஆச்சி அவர்கள்

ஊர் : பள்ளத்தூர்

தோற்றம்: 12—7—1947

மனைவி : AR. மீனாட்சி ஆச்சி அவர்கள்

காரைக்குடியிலும், சென்னையிலும் கல்வி பயின்று, தன் தந்தையிடமிருந்து சிட்பண்டு பற்றிய நிர்வாக முறைகளை யும், தொழில் நுணுக்கங்களையும் தெரிந்துகொண்டார். தந்தை காலமான பிறகு 1979ல் ஸ்ரீ விசாலம் சிட்பண்டு லிமிடெட் நிருவாக இயக்குனரானார். ஸ்ரீ விசாலம் சிட்பண்டு லிட் தொடங்கி நாற்பது ஆண்டுகள். அதற்குரிய கிளைகள் எழுபது ஆகும். கர்நாடகம், ஆந்திரம், பாண்டிச் சேரி ஆகிய மாநிலங்களிலும் இதன் கிளைகள் உள்ளது

ஸ்ரீ விசாலம் சாரிடபிள் டிரஸ்ட்

ஸ்ரீ அருணா சாரிடபிள் டிரஸ்ட்

ஸ்ரீ ராமசாமி - மெய்யம்மை சாரிடபிள் டிரஸ்ட்
ஆகிய அறக்கட்டளைகள் வழியே பல நல்ல பணிகளை, அறப்பணிகளை திரு. RM. அருணாசலம் அவர்கள் செய்து வருகின்றார்கள்.

ஸ்ரீராமசுவாமி -மெய்யம்மை அறக்கட்டளை வழியே மாதம் ஒன்றுக்கு ரூ 3000 வீதம் இயலாத நிலையிலுள்ள ஏழைப் பெண்களின் திருமணத்திற்கு பணம் கொடுத்து உதவி செய் கின்றார். ஆண்டு ஒன்றுக்கு ரூ 5000 செலவில் ஏழை மாணவர்களுக்கு நோட்புத்தகங்கள் வாங்கிக் கொடுத்து உதவுகின்றார்.

பொதுப்பணிகள் பொதுப்பணியில் ஆர்வம் மிக்க இவர் காரைக்குடி சுழற்குழுவின் செயலாளராக 1983 - 84ல் இருந்து பல அரிய சேவைகள் செய்தார். 1985-86ல் சுழற் குழுவின் தலைவரானார். பல இலவச வைத்திய முகாம் களை நடத்தினார். இலங்கை அகதிகளுக்காக மண்டபம் இராமேசுவரம், சாக்கோட்டை ஆகிய ஊர்களில் வைத்திய முகாம்கள் நடத்தி அவர்களுக்கு உடையும் வழங்கினார். காரைக்குடி சுழற்குழு வரலாற்றில் முதன் முதலாக 9 விருது களைப் பெற்ற பெருமை மிக்கவர்.

இறைப்பணிகள் பள்ளத்தூரில் இவர்களது குடும்பத்திற்கு உரிய தர்மசாசுதா கோவிலில் தினசரி பூசையும் சிறப்பு நாட் களில் சிறப்பு அபிஷேக ஆராதனையும் நடைபெறுகின்றது. கும்பகோணத்தில் எல்லை பிடாரி அம்மன் கோவிலைக் கட்டி திருக்குட நந்நீராட்டு விழா செய்தார். மயிலாடுதுறை நன்னிலம் ஆகிய வட்டங்களிலுள்ள ஆறு கோவில்களையும் தமது சொந்த செலவில் நிர்வகித்து வருகின்றார். சிறப்பாக அதற்குரிய விழாக்களையும் நடத்தி வருகின்றார். திருவரங் கத்தில் வேதபாடசாலையை சிறப்பாக நடத்தி வருகின் றார்.

பெருமைக்குரிய R. M. அருணாசலம் அவர்களைப் பற்றி, நிறைய எழுதலாம். அந்த அளவிற்கு பொதுப்பணி களும் இறைப்பணிகளும் செய்துள்ளார். செய்து வருகின் றார். அறிவுப்பணிக்கு, நல்ல பணிக்கு ஊக்கமும், உற்சாக மும் தரும் அவரைப் போன்றவரால் நமது சமூகம் பெருமை பெறுகின்றது. உயரிய உள்ளம் கொண்ட அவருக்கு வாழ்க்கையில் வெற்றி மேல் வெற்றி வருவது இயற்கையே யாகும்.

---

# கோட்டையூர்

RM.V. ராமசாமி
கோட்டையூர்.

கோட்டையூர் மாவணிகர் கொண்டு விற்றுக் கொண்டு வந்த
கோட்டையெல்லாம் கண்டு இயம்பினேம் – கோட்டையூர்
நாட்டை விட்டுச் சென்ற நகரத்தார் யாவரும் பொன்
கோட்டையுடன் வருவர் கொண்டு.
நீர்பெருகி ஊற்றெடுக்கும் நீண்ட புகழ்க் கோட்டை
யூர் பெருகி ஊற்றெடுக்கும் ஊருணிகள், சீர் பெருகி
அன்ன ஊரன்ன அருஞ்செல்வம் வீற்றிருக்கும்
பின்னும் ஓர் ஊழி பேரிட்டு

—பாடுவார் முத்தப்ப செட்டியார்

பசும்பொன் முத்துஇராமலிங்கம் மாவட்டம் காரைக்குடி யிலிருந்து 6 கி.மீ தொலைவில் உள்ளது. இவ்வூர் வேலங் குடி, கோ. அழகாபுரி ஆகிய ஊர்களையும் தன்னுள் உள் ளடக்கியுள்ளது. கோட்டையூர் பேரூராட்சி. இதன் மக்கள் தொகை 6361.

**ஊர்பெயர்** வெளிநாடு சென்று வணிகம் செய்து, தொழில் நடத்தி பொன்னையும், பொருளையும் கொண்டு வந்து கோட்டை போல குவித்து சிறப்புப்பெற்ற ஊர். கொற்றவை கோவில்கள் நிறைந்த ஊர். அறக்கொடை வள்ளல் அழகப்பர் பிறந்த ஊர்.

**முன் வரலாறு** இவ்வூர் நகரத்தார்கள் குளத்துப்பட்டியி லிருந்து கோட்டையூருக்கு குடியேறிவர்கள் என்று வயிநாகரம் வித்துவான். அ. இராமநாதன் செட்டியார் அவர்கள் தொகுத்து பண்டிதமணி கதிரேசன் செட்டியார் அவர்கள் புதிப்பித்த நாட்டுக்கோட்டை நகரத்தார் வரலாறு என்னும் நூலில் உள்ளது. இவ்வாறு குடியேறிய காலம் பத்தாம் நூற்றாண்டுக்கு முற்பட்டதாக இருக்கலாம்.

ஆன்மீகப்பணி, ஆலயப்பணி கோட்டையூர் நகரத்தார் ஆன்மீகத் துறையில் ஈடுபாடு மிக்கவர்கள். குறிப்பாக கோட்டையூர் நகரத்தார்களுக்கு கோவிலூர் மடம் ஏற்பட்ட காலத்திலிருந்து இன்று வரை அந்த மடத்துடன் தொடர்பு உண்டு. கோட்டையூர் மு சி. சின்னான் செட்டியார் அவர்கள் ரூ 50,000 செலவு செய்து யசூர்வேத பாடசாலை நடத்தினார்கள். ஒன்பது நகரக் கோவில்களில் ஒன்றான வேலங்குடிக் கோவில் இவ்வூருக்கு அருகில் உள்ளது. இவ்வூரிலும் அதன் அருகிலும் உள்ள ஆலயங்கள்.

1. சொற்கேட்டான் விநாயகர் கோவில். வேலங்குடி நகரச் கோவிலுக்கு அண்மையில் உள்ளது இக்கோவில் ஊரணி வற்றுவதில்லை. இக்கோவில் 400 ஆண்டுகளுக்கு முற்பட்டது.

2) வயல்நாச்சி அம்மன் கோர்வில் (3) கோட்ட நாச்சியம்மன் கோவில் 4) வயிரவர் கோவில் (5) கொல்லங்காளி கோவில் (6) ஐயனார் கோவில் (7) கிருட்டிணன் கோவில் (8) பெருமாள் கோவில் [கோட்டையூர் – வேலங்குடி] (9) சுந்தரவிநாயகர் கோவில் (10) கொற்றங்கருப்பன சுவாமி கோவில்

11. கோட்டையூர் அருள்மிகு மீனாட்சி அம்மன் ஆலயம். இவ்வாலய குடநீராட்டு விழா 27—1—1980ல் நடைபெற்றது. இவ்வூர் நகர சிவன் கோவிலில் பெரிய பிரகாரம் உள்ளது.

சிறப்பான திருவிழா — ஏழு ஊர் செவ்வாய்

## கல்வி நிலையங்கள்

[கல்விப்பணி] 1) அழ. வள்ளியம்மை ஆச்சி தொடக்கப் பள்ளி.

2) தஞ்சாவூர் அருணாசலம் செட்டியார் அரசினர் உயர் நிலைப்பள்ளி.

3) சிதம்பரம் செட்டியார் பெண்கள் மேல் நிலைப் பள்ளி.

4) முத்தையா அழகப்பர் மேல்நிலைப் பள்ளி.

5) ஸ்நாதன தர்ம வித்யாலயம்.

6) மேநாடு மெம்மோரியல் ஆங்கிலப்பள்ளி.

விசுவேசுவரர் அறக்கட்டளை வழியே கோட்டையூரில் ரூபாய் 12 கோடி செலவில் மருத்துவக் கல்லூரி அமைய உள்ளது. முதற்கட்டமாக 2 கோடி ரூபாய் செலவில் மருத்துவமனை கட்டப்படுகின்றது. இங்கு க.வீ.அழ.மு. இலவச மருத்துவனை உள்ளது. இதன் பொன் விழா 12—2—1978ல் அ.க.அ சித.அழ. சிதம்பரம் செட்டியார்

அவர்கள் தலைமையில் சிறப்பாகக் கொண்டாடப்பட்டது. ஊர்ச்சிறப்பு:- வள்ளல் அழகப்பர் பிறந்த ஊர். 1944ல் டாக்டர் அழகப்பச் செட்டியார் அவர்கள் சொந்த விமானம் வாங்கி, ''சுபீடர் ஏர்வேஸ் என்ற கம்பெனியைத் தொடங்கினார்கள். இவ்வூர் ஊராட்சி மன்றத் தலைவராக பெ.க. அ. சித. வீரப்ப செட்டியார் அவர்கள் இருந்த பொழுது ஏழைகளின் வீடுகளுக்குரிய வரி முழுமையும் தாமே கட்டினார். தற்பொழுது கோட்டையூர் பேரூராட்சித் தலைவராக S. சொக்கலிங்கம் செட்டியார் அவர்கள் உள்ளார். இவ்வூரில் புகழ்பெற்ற புத்தகக் காவலர் ரோசா முத்தையா செட்டியார் அவர்களால் நிறுவப்பட்டு நிருவாகிக்கப்பட்டு வரும் பழமையான நூல்கள் நிறைந்த நூலகம் உள்ளது. இங்கு அண்ணாமலை நூற்பாலை. தீப்பெட்டித் தொழிற்சாலை 5000 நூல்கள் அடங்கிய அரசு நூலகமும் உள்ளது. வாரச்சந்தை திங்கள் கிழமை கூடுகின்றது. கோட்டையூர் அருள்மிகு கொற்றங்கருப்பணசாமிபதிகமும், நவரத்தின மாலையும் கோட்டையூர் சுப்பிரமணியக் கவிராயரால் இயற்றப்பெற்று மு. சி. அ. அழ. சின்னஞ்செட்டியார் அவர்களால் வெளியிடப் பெற்றது.

நகரத்தார்கள் 4 கரை புள்ளி விபரம் [1980]

| | | | |
|---|---|---|---|
| 1) | இளையாற்றங்குடி கோயில் கரை புள்ளிகள் | 89 | 100 |
| | பிள்ளையார்பட்டி கோயில் கரை புள்ளிகள் | 11 | |
| 2) | நேமம் கோவில் கரை புள்ளிகள் | | 104 |
| 3) | இரணியூர் கோயில் கரை புள்ளிகள் | | 76 |
| 4) | மாற்றூர்க் கோயில் கரை புள்ளிகள் | | 166 |
| | | | 446 |

---

நமது செய்திகள் மதுரை நகரத்தார் இளைஞர் சங்கம் சார்பில் கல்வியில் முதன்மை பெற்றவர்களைப் பாராட்டும் விழா 30—07—88ல் மதுரை நகர விடுதியில் சிறப்பாக நடைபெற்றது. பாராட்டுப் பெற்றவர்கள் மதுரை பல்கலைக் கழகத்தில் முதல் மாணவியாகத் தேறிய செல்வி அண. கவிதாராணி, +2வில் வணிகவியல் பாடத்தில் 200க்கு 200 மதிப்பெண் பெற்ற மதுரை மீனாட்சி அம்மன் கோவில் முன்னாள் தக்கார் VN சிதம்பரம் செட்டியார் அவர்களின் பேரன் திரு பெரி செல்வன் அழகப்பன், திரு வயி பாலசுப்பிரமணியன் ஆகியோராவர். விழா இளைஞர் அணித்

தலைவர் M.G.N. மாணிக்கம் அவர்கள் முன்னிலையில் சிறப்பாக நடைபெற்றது. கவிஞர் சொக்கு சுப்பிரமணியன் அவர்களும், கவிஞர் இராகவன், முத்து அவர்களும் கல்வியில் முதன்மை பெற்றவர்களைப் பாராட்டிப் பேசினார்கள். கல்வி உதவித் தொகையும் வழங்கப்பட்டது.

2] தஞ்சை மாவட்டக் கல்கண்டு வாசகர் பேரவை சார்பில் தஞ்சை இராமநாதன் செட்டியார் மண்டபத்தில் 23, 24—7—88 கல்கண்டு வாசகர் பேரவை விழா சிறப்பாக நடைபெற்றது.

3] காவிரிப்பூம்பட்டிணத்தில் பட்டினத்தடிகள் திருவிழா 19—7—88 முதல் 30—7—88 வரை சிறப்பாக நடைபெற்றது.

4] நேமம் கோவிலில் ஆடி 18ல் (2—8—88) 4ம் ஆண்டு ஆடிப்பெருக்கு விழா சிறப்பாக நடைபெற்றது.

5] 5—7—88 அன்று மதுரை டாக்டர் N.N. கண்ணப்பன் அவர்களுக்கு அவரது சேவையைப் பாராட்டி அமுதசுரபி கலைமன்றத்தின் சார்பில் பாராட்டு விருது வழங்கப்பட்டது. பாராட்டு விருதுவை வழங்கியவர் முன்னாள் M.L.A பொன் முத்துராமலிங்கம் அவர்கள்.

**பொன். புதுப்பட்டி சோம. இயற்பகைச் செட்டியார் அவர்களின் வாழ்த்து**

சூலை 1988 நகரத்தார் இதழில் என்னைப் பற்றி சிறப்பாக பிரசுரித்துள்ளீர்கள். தங்கள் அன்பிற்கு மிக்க நன்றி. இறைவனருளால் நகரத்தார் 'இதழ்' மென்மேலும் வளர்ந்து புகழ்பெற்று எல்லோரும் பயனடைய பிரார்த்திக்கின்றேன்.

அன்புடன்
சோம. இயற்பகைச் செட்டியார்

**உங்கள் பார்வைக்கு**

27—7—88

சனதா கட்சி. காங்கிரசு, லோக்தளம், காங்கிரசு (S) ஆகிய நான்கு கட்சிகள் இணைந்து சமாசவாதி சனதா தளம் என்ற புதுக்கட்சியைத் துவக்கியுள்ளது. இக்கட்சி ஆகசுட் 15 முதல் செயல்படத் தொடங்கும்.

27—7—88

பசும்பொன் முத்துஇராமலிங்கம் மாவட்ட ஆட்சித் தலைவராக திரு எல். பழமலை அவர்கள் நியமிக்கப்பட்டுள்ளார்.

# பர்மாவில் மாற்றம்

தினமணி;27—7—88

பர்மாவின் அதிபராக 26 ஆண்டுகள் ஆட்சி செலுத்திய செனரல் நீவின் கட்சித் தலைமைப் பதவியிலிருந்து விலகினார். 1981ல் நாட்டின் அதிபர் பதவியிலிருந்து விலகிய அவர் நாட்டின் மிக உயர்ந்த பதவியான கட்சித்தலைவராக இருந்து 25—7—88 வரை செயல்பட்டு வந்தார். அப்பதவியிலிருந்தும் அவர் தற்பொழுது விலகிவிட்டார். அவரால் தொடங்கப்பட்ட பர்மா சோசலிட் கட்சி இதுவரையில் ஒரு கட்சி ஆட்சியே நடத்தி வந்தது. இனிமேல் ஒரு கட்சி ஆட்சி நடத்துவதா? பலகட்சிகள் செயல்பட அனுமதிப்பதா? என்பதை செப்டம்பர் மாதத்தில் நடைபெறும் வாக்கெடுப்பு வழியே முடிவு செய்யப்படுமென்று கூறினார். இதற்கு எல்லாம் காரணம் பர்மாவின் பொருளாதாரம் சீர்குலைந்து மக்கள் கிளர்ச்சி, மாணவர் கிளர்ச்சி ஏற்பட்டுள்ளதேயாகும். மேலும் நீவினின் சோசலிட் கட்சியின் பொதுச் செயலாளர் அயேகோ அக்கட்சியின் சார்பாக விடுத்துள்ளஅறிக்கையில் இனிமேல் தனியார் துறையில் வியாபாரிகள் அனுமதிக்கப் படுவார்கள் அரசுத் துறையிலுள்ள உற்பத்தி நிறுவனங்கள் தனியார் துறைக்கு மாற்றப்படும், வெளிநாட்டு மூலதனம் நாட்டுக்குள் வர அனுமதிக்கப்படும்; சுதந்திரமாக செய்தித்தாள்கள் வெளியிட அனுமதி வழங்கப்படும். தமது அண்டை நாடுகளுடன் மீண்டும் முன்போல் நேச உறவு கொள்ளப்படும் என்று குறிப்பிட்டுள்ளார் பர்மாவின் புதிய அதிபர் செங்ன் எட்வின்.

**ஆசிரியர் குறிப்பு:–** இந்த மாறுதல்களின் வழியாக நம்மவர்களுக்கு பர்மாவில் இழைக்கப்பட்ட அநீதிக்கு நியாயம் கிடைக்க சிறிதளவு வழி ஏற்பட்டுள்ளது.

---

## பொதுச்செய்திகள்–ஆகஸ்ட்–1988

1—7—88

அ) உலகின் வெப்பநிலை அதிகரித்து வருவதால் உணவு உற்பத்தி பாதிக்கப்படும் என்றும், உலக மக்கள் தொகை 500 கோடியைத் தாண்டிவிட்டது என்றும் இந்திய விஞ்ஞானி டாக்டர் சுரேசு சின்கா கூறினார். குறிப்பாக வெப்பநிலை அதிகரித்தால் அரிசி உற்பத்தி பாதிக்கப்படுமென்றார்.

2-7-88

ஆ) சென்னை தொலைக்காட்சி 2வது அலை வரிசையை மத்திய செய்தி ஒலிபரப்புத்துறை அமைச்சர் H.K.L. பகத் தொடங்கிவைத்தார். இந்த இரண்டாவது அலைவரிசை ஒலிபரப்பு மூலமாக 80 கிலோமீட்டர் தொலைவிலுள்ள பகுதிகளிலுள்ள ஊர்களும் சுமார் 80லட்சம் மக்களும் பயன்பெறுவார்கள்.

ஆ) மானாமதுரை சிப்காட் தொழிற்பேட்டையில் 15 ஏக்கரில் 20லட்சம் செலவில் பாடி கட்டும் தொழிற்சாலை மருதுபாண்டியர் போக்குவரத்துக் கழகத்தின் சார்பில் இந்த ஆண்டு அமைக்கப்படுகின்றது.

4-7-88

சிவகங்கை அருகேயுள்ள சர்க்கரை ஆலை டிசம்பர் மாதம் முதல் செயல்படத் தொடங்கும் ஒரு நாளைக்கு 2000 டன் கரும்பு பிழியும் திறன் கொண்டதாக இருக்கும். இத்தகவல்களை மத்திய அமைச்சர் ப. சிதம்பரம் கூறினார்.

9-7-88

அ) பெங்களூர் - திருவனந்தபுரம் துரித வண்டி [Express] கேரளா, கொல்லம் மாவட்டம் சாசுதான் கோட்டைக்கும், பெரி நாடுக்கும் இடையே சென்று கொண்டிருந்த போது அஷ்டமுடி என்ற ஏரியின் மீது உள்ள பெருமான பாலத்தில் தடம் புரண்டு 7 ரயில் பெட்டிகள் அடியோடு நீரில் மூழ்கியது. 100 பேர் சாவு.

ஆ) ஆகசுட் 15ம் முதல் தொலைக்காட்சியில் தமிழ் நிகழ்ச்சிகள் இரவு ஏழரை மணியிலிருந்து ஒன்பது மணி வரையில் ஒளிபரப்பப்படும்.

15-7-88

இராமநாதபுரத்திற்கு எஸ்.டி.டி. தொலைபேசி புதன் கிழமை முதல் துவங்கியது.

27-7-88

குசராத்தில் போலீசார் அரசை எதிர்த்து கிளர்ச்சி

17-7-88

அமெரிக்காவைச் சார்ந்த 11 வயது இளம் பைலட் அட்லாண்டிக் கடலைக் கடந்து, விமானத்தில் பாரிசு வந்திறங்கினான். கிறிஸ்டோபர்மார்ஷல் என்ற அந்த சிறுவன் தனது மூனி 252 விமானத்தில் இந்த தீரப் பயணத்தை மேற்கொண்டான்.

20—7—88

பொதுத்துறை [அரசு] வங்கிகளின் லாபம் 1987ல் 37 சதம் அதிகரித்துள்ளது. 1986ல் வங்கிகளின் இலாபம் ரூ. 192.50 கோடி 1987ல் இது ரூ. 261.70 கோடியாக அதிகரித்து இருக்கின்றது.

24—7—88

சிமிண்டு லெவி முறை விரைவில் ரத்து செய்யப்பட உள்ளது. அதிக அளவில் தற்பொழுது நமது நாட்டில் சிமிண்டு உற்பத்தி செய்யப்படுவதால் சிமிண்டு விலை மேலும் குறையும் என்று மத்திய அமைச்சர் வெங்கல்ராவ். கூறினார்.

23—7—88

ஒரு மாத காலமாக நடந்துவந்த தமிழ்நாடு அரசு ஊழியர் வேலைநிறுத்தம் அரசுக்கும், ஊழியர்களுக்கும் ஏற்பட்ட உடன்பாட்டையடுத்து 23—7—88 தேதியுடன் முடிவுற்றது.

உங்கள் கவனத்திற்கு:

அறிவியல் செய்திகள்: மேற்கு சொ்மனியில் பயணிகள் ரயில் ஒரு மணிக்கு 460 கிலோமீட்டர் சென்று உலக சாதனை படைத்துள்ளது. 1981ல் பிரான்சில் டி.ஜி.வி. ரயில் ஒரு மணிக்கு 380 கி.மீ. வேகத்தில் சென்றது. அச்சாதனையை மேற்கு சொ்மனி முறியடித்துவிட்டது

24—7—88

அ] இந்தியாவில் முதன்முதலாக நவீன இயந்திர மனிதன் ஒன்றை பெங்களூர் பாரத மின் சாதனங்கள் உற்பத்தி நிறுவனம் தயாரித்துள்ளது. இந்த யந்திர மனிதன் பல்வேறு பணிகளைச் செய்யக்கூடிய திறமை மிக்கவன்.

ஆ] ராக்கெட்டுகளில் உந்துவிசை அளிக்க உதவும் திரவ எரிபொருள் தயாரிப்பு ஆலையை ஆந்திரத்தில், தனுக் என்ற இடத்தில் இந்திய குடியரசுத் துணைத் தலைவர் சங்கர் தயாள்சர்மா துவக்கி வைத்தார்.

அடுத்த ஆண்டுக்குள் இராமேசுவரத்தில் T.V. அஞ்சல் நிலையம்.

## ஆலயச் செய்திகள்.

1] உ.பியிலுள்ள பத்ரிநாத் கோவிலின் அடிவாரத்தில் வெடிப்புகள் தோன்றியுள்ளது ஆதிகுரு சங்கராச்சாரியாரால் 8ம் நூற்றாண்டில் கட்டப்பட்டது. இக்கோவில் பல முறை பனிச்சரிவினால் பாதிக்கப்பட்டு, புதுப்பிக்கப்பட்டது

2. மேல்மருவத்தூர் ஆதிபராசக்தி அறக்கட்டளை சார்பில் சென்னையில் சனிக்கிழமை மாபெரும் ஆன்மீகப் பேரணி நடைபெற்றது.

## கல்விச்சேவை:

23—7—88

1. திருச்சி ஹீபர் கல்லூரியில் இந்திராகாந்தி திறந்த வெளிப்பல்கலைக்கழக மையம். இப்பல்கலைக்கழக முதல் பேராசிரியர் டி. சுவாமிராசு. தொடர்புகொள்ளவேண்டிய முகவரி. இயக்குநர், இந்திராகாந்தி திறந்தவெளிப் பல்கலைக்கழகம், டில்லி.

2. தொலைக்காட்சியில் ஒவ்வொரு மாதமும் 3வது சனிக்கிழமை குழந்தைகளுக்கான திரைப்படம் காட்டப்படும்.

## தொழில் வளர்ச்சி செய்திகள்.

1—7—88

சிறு தொழில் நிறுவனங்களுக்கு சிறப்பு உதவி திட்டம் இத்திட்டத்தின் கீழ் தரக்கட்டுப்பாடு பிரிவுகளுக்கு ரூ 7.50 லட்சம் வரை உதவி வழங்கப்படுகின்றது 8 ஆண்டு காலத்தில் இந்த கடன் உதவியை திருப்பிச் செலுத்தலாம் முதல் 3 ஆண்டுகளுக்கு விலக்கு அளிக்கப்படும். சலுகை வட்டியாக 11.5 வசூலிக்கப்படும். விவரங்களுக்கு தொழில் வளர்ச்சி மையங்களை நாடுமாறு வங்கி பொது மேலாளர் S. கோபாலன் கூறினார்.

9—7—88

இந்திய தொழில் வளர்ச்சி வங்கி அதன் சிறு தொழில் வளர்ச்சி நிதியின் வழியே சிறுதொழில் வளர்ச்சிக்கு உதவி வழங்கும் திட்டம்

### நிபந்தனைகள்:

1. ஐந்து லட்சம் மக்கட்தொகைக்கு மேற்படாத கிராமம் அல்லது சிறு நகரில் தான் தொழிலை அமைத்திட வேண்டும்.

2. தொழில் புதிதாகத் தொடங்கப்படுவதாக இருந்தால் மைய, மாநில அரசின் மூலதன முதலீடு உதவித் தொகையைத் தவிர மற்ற எந்த மாநில நிதி நிறுவனங்கள் வழியே பங்குத்தொகை, உதவித்தொகை எதுவும் பெறக் கூடாது.

3. தொழில் முதலீடு ரூ. 5 லட்சத்திற்குள் இருக்க வேண்டும். இந்திய தொழில் வளர்ச்சி வங்கியிடமிருந்து மறு நிதி உதவி கிடைக்கக்கூடிய தொழில்களுக்கே இத்திட்டத்தின் கீழ் உதவி கிடைக்கும்

4. தொழில் நிதி பெறுவதற்குரிய தகுதிகள்: பொருட்களின் தயாரிப்பு, அவற்றைப் பதனப்படுத்துதல் அல்லது பக்குவப்படுத்துதல் இவற்றில் ஈடுபட்டுள்ள புதிய தொழில்கள் அல்லது ஏற்கனவே செயல்பட்டு நலிந்துபோன தொழில்கள் ஆகியவை இத்திட்டம் மூலம் உதவி பெற முடியும்.

5. இவ்வாறு பெறும் தொகையை 7 ஆண்டுகளுக்குள் திருப்பிச் செலுத்த வேண்டும். இவ்வாறு பெறப்படும் கடனுக்கு பிணையம் ஏதும் தரவேண்டியது இல்லை. இத்திட்டத்தின்கீழ் முதலீட்டில் 15 சதம் வரை உதவி அளிக்கப்படும். அதிகப்படியாக அளிக்கப்படும் தொகை ரூ. 75,000 ஆகும். இத்திட்டம் விரைவில் அமுலுக்கு வரவுள்ளது. தொழில் வளர்ச்சி மையங்களுடன் தொடர்புகொண்டு மேல் விபரங்களை தெரிந்துகொள்ளவேண்டியது.

பூட்டு உற்பத்தியில் இந்தியாவில் இரண்டாவது இடத்தை "திண்டுக்கல்" வகிக்கின்றது. முதலிடம் ம.பி.யில் உள்ள அலிகார்.

## உலகிலேயே மிகப்பெரிய செல்வந்தர்

சப்பானின் செய்பு ரயில்வே குரூப்பின் தலைவர் யோசியகிசுட்சமி உலகிலேயே மிகப்பெரிய செல்வந்தர் என்று போர்பஸ் என்னும் இதழ் தெரிவித்துள்ளது. இவர் 1890கோடி அமெரிக்க டாலருக்கு சொந்தக்காரர் (அதாவது சுமார் 24 ஆயிரத்து 570 கோடி ரூபாய் ஆகும்)

## இயற்கை எய்தினார்கள்.

1. மதுரை, உமா டிரேட் லிங், உமா சானிட்டரி. உரிமையாளரான அலவாக்கோட்டை சி. அரு. சித சீனிவாசன் செட்டியார் அவர்கள் 11-7-88ல் இயற்கை எய்தினார்.

2. சொக்கநாதபுரம் மெ. மு. மெய்யப்ப செட்டியார் தாயார் மெ மு. உடையம்மை ஆச்சி அவர்கள் 20—7—88ல் மதுரையில் காலமானார்கள். அவருக்கு வயது 86.

# மாற்றூர்க் கோவிலில் நான் கண்ட அரியகாட்சிகள்
## (நான் கண்ட மாற்றூர்க் கோவில்)

சுப. செந்தமிழன்

நான் மாற்றூர்க்கோவில் உறையூர் பிரிவைச் சேர்ந்தவன். எனவே மாற்றூர்க்கோவில் குடமுழுக்கு விழா 19—8—88ல் அதாவது ஆவணி 3உ நடைபெறப்போகும் செய்தியை அறிந்து, மாற்றூர்க் கோவிலைப் பற்றிய வரலாற்றை, செய்திகளை வெளியிடவேண்டுமென்ற ஆர்வத்துடன் மாற்றூர்க் கோவில் செயலர், இனியபண்பாளர் சுப. மு. நா. வீர. சுப்பிரமணியன் அவர்களை காரைக்குடி 31 முத்து ஊரணி கிழக்கு வீதியிலுள்ள அவரது இல்லத்தில் 5—7—88 அன்று சந்தித்தேன். அவரும் இனிது வரவேற்றார். வீர. சுப்பிரமணியன் அவர்கள் BSc, MA படித்தவர்கள். MAயில் தமிழில் பல்கலைக்கழகத்தில் முதலிடம் பெற்று, பல சிறப்புப் பரிசுகள் பெற்றவர். சிறந்த எழுத்தாளர். அவர் தினமணி சுடர் [12—11—67] இதழில் எழுதி வெளிவந்துள்ள 'மாற்றூர் ஐந்நூற்றீசுவரர்' தலைப்பின் கீழ் எழுதியுள்ள சிறந்த கட்டுரையை இந்த மாத இதழின் முன் பகுதியில் வெளியிட்டுள்ளேன். தக்க அடிப்படைகளுடன், மிகத் தெளிவாக எழுதப்பட்டுள்ளது அக்கட்டுரை அந்த இனியபண்பாளர் என்னுடைய ஆர்வத்தை தெரிந்துகொண்டு, தனது பல பணிகளையும் ஒதுக்கி வைத்து விட்டு அவருடைய மகிழுந்தில் என்னை அழைத்துக்கொண்டு மாற்றூர்க் கோவிலுக்குச் சென்று காட்டி மிகவிளக்கமாக பல விவரங்களை கூறினார். மாற்றூர்க் கோவில் அருகிலுள்ள நகர விடுதிக்கும் என்னை அழைத்துச் சென்று காட்டி பல விவரங்களை எடுத்துக் கூறினார். இனிமை, பொறுமை இரண்டும் அவருடன் கலந்திருந்தது. அவர் கோவில் பற்றியும், விடுதி பற்றியும் தந்த விபரங்களையும், நான் அங்கு பார்த்து, கண்டு சேகரித்த செய்திகளையும் கீழே தந்துள்ளேன்.

மாற்றூர்க்கோவில்

இறைவர்: அருள்மிகு ஐந்நூற்றீசுவரர்
அம்மன்: அருள்மிகு. பெரியநாயகி அம்பாள்

மாற்றூர்க்கோவில் காரைக்குடிக்கு கிழக்கே 5 மைல் தொலைவிலும் இலுப்பைக்குடிக்கு 2 மைல் தொலைவிலும் உள்ளது. இக்கோவில் பற்றிய வரலாற்று, விபரங்கள்

மிகத் தெளிவாக முன்பக்கத்தில் மாற்றூர்க்கோவில் செயலர் எழுதி வெளிவந்துள்ள 'மாற்றூர் ஐந்நூற்றீசுவரர்' கட்டுரையில் உள்ளது. எனினும் நான் அங்குகண்ட, சேகரித்த செய்திகளை இங்கே கீழே தந்துள்ளேன். முதல் குடமுழுக்கு விழா 2—2—1949 தைமீ 20உயும் இரண்டாம் குடமுழுக்கு விழா ஆனந்த வருடம் ஆனி மீ 17உயும் [1—7—1974 திங்கள் கிழமை] நடந்துள்ளது. இந்த விபரங்கள் ஆலய வாயிலிலுள்ள கல்வெட்டிலுள்ளது ஆலய முன் மண்டபத்திலுள்ள விநாயகரை வணங்கிவிட்டு ஆலயத்திற்குள் நான் சென்றபொழுது நான் கண்ட காட்சிகள் என்னை வியக்கவைத்தன. அழகிய சிற்பங்கள் அவை செதுக்கப்பட்டிருக்கும் முறைகள் என்னை மட்டுமல்ல அதனை ரசித்துப் பார்ப்பவர்கள் அனைவரையும் கவரவே செய்யும். ஆலயத்தின் உள்ளே முன் பகுதியில் உள்ள தூணுடன் இணைந்து காணப்படும் வல்லபகணபதி சிலையும், மயில் வாகனத்துடன் கூடிய சுப்பிரமணியர் சிலையும் கண்ணை மட்டுமல்ல, கருத்தையும் கவரும் வகையில் அக்கால சிற்பக்கலை சிறப்பை எடுத்துக்காட்டும் வகையில் உள்ளது. கோவிலில் நுழைந்தவுடன் உட்புறத்தில் முன் பகுதியிலுள்ள மேல்ப் பகுதியில் 12 ராசிக்குரிய சிற்பங்கள் செதுக்கப்பட்டுள்ளது குறிப்பிடத்தக்கது. கோவிலின் உள்ளே கிணறு ஒன்றும் உள்ளது. கோவிலின் தலவிருட்சம் மகிழமரம் ஆகும். இதில் குறிப்பிடத்தக்க செய்தி என்னவென்றால் பல ஆண்டுகள் ஆகியும் பசுமையுடன் அந்த மரம் உள்ளதேயாகும். அதன் இலைகள் மிக பசுமையுடன் காணப்படுகின்றது. அந்த மரத்திற்கு அருகே முனிசுவரர் உள்ளார். ஆலயத்தின் உள்ளே தட்சிணாமூர்த்தி இருக்குமிடத்திலுள்ள யாழியின் வாயில் ஒரு கல்லில் ஆன உருண்டைக்கல் உள்ளது. அந்த இடத்தில் கல்லில் கம்பிகள் போல் செதுக்கப்பட்டுள்ள முறை என்னை மிகவும் கவர்ந்தது. 1949க்கு முன்னால் 14 ஆண்டுகள் 500 சிற்பிகள் வேலை பார்த்து கோவில் சுற்றுப்பிரகாரமும், சந்நிதி ஆகியவற்றை உருவாக்கினார்கள் என்ற விவரத்தை வீர. சுப்பிரமணியன் அவர்கள் சொன்னார்கள். சுவாமிகள் கோவிலுக்கு கிழக்கே மிகப் பழமை மிக்க ஊரணிக்கரை பிள்ளையார் கோவில் உள்ளது. இந்த ஆலயத்திலுள்ள மற்றொரு குறிப்பிடத்தக்க செய்தி என்னவென்றால் சண்டிகேசுவரர் விமானம் ஆகும். மற்ற ஆலயங்களில் சண்டிகேசுவரர் விமானம் சுதையால் அமைக்கப்பட்டிருக்கும் ஆனால் இவ் ஆலயத்தில் சண்டிகேசுவரர் விமானம் கல்லால் அமைக்கப்பட்டுள்ளது. இவ் ஆலயத்தில் சோமசுந்தரர் சன்னதிக்கு முன்புள்ள எடுத்துக்கட்டிய மண்டபம் குறிப்பிடத்தக்கது. அந்த மண்டபம் வழியே பிரகாசமான ஒளி

ஆலயத்திற்குள் வருகின்றது பைரவர்சன்னதி முழுக்க கருங் கல்லால் ஆனது இக்கோவிலின் தலைவராக கோட்டையூர் அ. க. அ. சித. அழ. சிதம்பரம் செட்டியார் அவர்கள் உள் ளார்கள். செயலாளர் & பொருளாளராக சுப. மு. நா. வீர. சுப்பிரமணியன் அவர்களும், அவரது உடன்பிறப்பு நாராயணன் அவர்களும் உள்ளனர். மாற்றூர்க்கோவில் குடமுழுக்கு விழா குழுத்தலைவராக கோட்டையூர் இராம. பெ. நா. அருணாசலம் செட்டியார் அவர்கள் உள்ளனர்.

மாற்றூர்க்கோவில் விடுதி நகரக் கோவில்கள் 9 விடுதி களிலும் மிகப்பெரியது மாற்றூர்க்கோவில் விடுதி. ஆலயத் திற்கு அண்மையில் உள்ளது. நவீன வசதிகள் அனைத் தும் கொண்டது. சுமார் 60 வருடங்களுக்கு முன்னால் கட்டப்பட்டிருக்கும் என்று கூறப்படுகின்றது. ஒரே சமயத் தில் 500 பேர் சாப்பிடக்கூடிய வசதி நிறைந்த Hall நான்கு அறைகள் களஞ்சியக்கட்டு ஆகியவையும் உள்ளது இவ் விடுதியில் திருமணங்கள் நடத்தும் நம்மவர்களுக்கே செலவு மிக மிக குறைவாகும். மின் கட்டணம் விடுதியை சுத்தப் படுத்தும் செலவை தவிர வேறு எவ்வித கட்டணமோ, வாடகையோ கொடுக்கவேண்டியது இல்லை. வசதிகளுக்கு குறைவில்லை.

சுருக்கமாக சொன்னால், ஒரே வரியில் சொன்னால் மாற்றூர்க்கோவில் ஒரு கலைக்கருவூலமாகும். நகரத்தார் இனத்துக்கு பெருமை சேர்க்கும் கலைக் களஞ்சியமாகும். தமிழகத்திற்கு பெருமை தேடித்தரும். சிற்பச் செல்வங்கள் நிறைந்த கலைக் கோவிலாகும்.

---

## சேலம் நகரத்தார் சங்கம்
## 22வது ஆண்டு நிறைவு விழா.

சேலம் நகரத்தார் சங்கத்தின் 32வது ஆண்டு நிறைவு விழா 1988ம் வருடம் ஆகஸ்டு திங்கள் 7ம் நாள் ஞாயிற்றுக் கிழமை சிறப்பாக நடைபெற உள்ளது. விழாவில் திருவாளர்கள் டாக்டர். சுப. அண்ணாமலை, பொற்கிழிக் கவிஞர் திரு. சொ.சொ. மீ. சுந்தரனார், டாக்டர் பழ. திரு. முத்தப்பன், சொல்லின் செல்வர் திரு பழ கருப்பையா ஆகியோர் பங்கேற்று சிறப்பிக்க உள்ளனர். விழா ஏற்பாடு களை தலைவர் M.S. சொக்கலிங்கம் செட்டியார் அவர்கள், துணைத் தலைவர் T. சிதம்பரம் செட்டியார் அவர்கள், செயலாளர் CT. ஏகப்பன் அவர்கள், செயலாளர் RM. பழனியப்பன் அவர்கள். ஆடிட்டர் ST. அண்ணாமலை அவர்கள் M A P L. அண்ணாமலை செட்டியார் அவர்கள் ஆகியோர் சிறப்பாக செய்து வருகின்றனர்

# நகரத்தார் புத்தக வங்கி, மதுரை.

## நகரத்தார் மாணவர்கள் கவனிக்க:

நமது சமூக மாணவர்கள் புத்தக வங்கி நிறுவத் திட்டமிட்டு அதற்குரிய முயற்சியில் ஈடுபட்டு உள்ளார்கள். இதில் அனைத்து பாடப் புத்தகங்களும் இடம் பெறும். இவ் வங்கியை பயன்படுத்திக் கொள்ள விரும்பும் மதுரை மாநகர் கல்லூரி மாணவர்கள் தங்களுடைய பெயரை 9—9—88க்குள் பதிவு செய்து பயன்படுத்திக் கொள்ள வேண்டியது. இப்புத்தக வங்கி மதுரை நகர விடுதியில் செயல்பட மதுரை நகரத்தார் சங்க செயற்குழு ஒப்புதல் அளித்துள்ளது. இப் புத்தக வங்கியின் புரவலர் மு சி நா. மாணிக்கம் அவர்கள் தலைவர் – மேலைச்சிவபுரி பழ இராமசாமி அவர்கள் துணைத் தலைவர் - நா. சுந்தர், ம. நடராஜன் அவர்கள் செயலாளர் - பழ. சு. பழனியப்பன் அவர்கள், பொருளாளர் த. இராமனாதன் அவர்கள். இவ்வங்கிக்கு நகரத்தார் பெருமக்கள் நல் ஆதரவு தந்து. தங்களால் இயன்ற அளவு பொருள் உதவியும், பழைய. புதிய பாடப் புத்தகங்களை அன்பளிப்பாக தந்தும் ஆதரவு தருமாறு அன்புடன் இதன் தலைவர் கேட்டுக் கொள்கின்றார்.

## திருச்சி நகரத்தார் சங்க கூட்டுத்திருமணங்கள்

விபவ ஆண்டு ஆவணித் திங்கள் 13ம் நாள் (29-8-88) திங்கட்கிழமையன்று பிள்ளையார்பட்டியில் திருச்சி நகரத்தார் சங்க சார்பில் சிறப்பாக கூட்டுத்திருமணங்கள் நடைபெற உள்ளது.

## வாசகர்கள் கவனத்திற்கு:

1. ''நகர கோயிற் பதிகம்" என்னும் தலைப்பின் கீழுள்ள பத்துப் பாடல்களிலும் முதல் அடி சிறிது விலகியுள்ளது. இதை சீர்படுத்தி படித்துக் கொள்ள வேண்டியது.

2. திருநீறு அணியும் முறை என்ற பாட்டில் ''சக்திரும் சிவன் என்னலாம்'' என்ற வரியினை சக்தியும் சிவன் எனலாம் என்று மாற்றிப் படித்துக்கொள்ளவும்.

3. நான் அறிந்த சில செய்திகள் என்ற தலைப்பில் ''AL AR MS'' என்று போடப்பட்டுள்ளதை AL AR SM என்று திருத்தி வாசித்துக்கொள்ள வேண்டியது.

4. பர்மாவில் பெரும் கிளர்ச்சி. அதிபர் எல்வின் விலகல்

# கொன்னையூர்
# அருள்மிகு முத்துமாரியம்மன் திருக்கோயில்

கொப்பனாப்பட்டி - புதுக்கோட்டை மாவட்டம்.

---

நிகழும் மங்களகரமான விபவ வருடம் ஆவணி மாதம் 30ந் தேதி 15—9—88 வியாழக்கிழமை சுபதினத்தில் காலை 7 35 மணிக்கு மேல் 8.05 மணி அளவில் திருக்கோயில் திருக்குடமுழுக்கு நன்னீராட்டு விழா நடைபெறும்.

திருக்குட நன்னீராட்டு விழாவிற்கு பக்தர்கள் தங்களால் இயன்ற நன்கொடைகளை ரொக்கமாகவோ, டிராப்டாகவோ, செக்காகவோ நேரில் அல்லது தபால் மூலம் செயலாளர், பொருளாளர் அருள்மிகு முத்துமாரியம்மன் திருக்கோயில் கும்பாபிஷேக குழு, கொன்னையூர், கொப்பனாப்பட்டி 622 401, புதுக்கோட்டை மாவட்டம் என்ற முகவரிக்கு அனுப்பி அருள்தரும் அன்னை முத்து மாரியம்மன் பேரருளை பெற வேண்டுகிறோம்.

கு. பட்டுச்சாமி
செயலாளர் & பொருளாளர்

ந. சிவசுப்பிரமணியன்
செயலாளர் & பொருளாளர்
கும்பாபிஷேக கமிட்டி

மு.ராம சேதுராமன்
திருப்பணிக் குழு தலைவர்
மற்றும்
கும்பாபிஷேக கமிட்டி
தலைவர்

---

## வரும் இதழில்:

பாகனேரி, அறநெறிச் செல்வர் முத்து பழனியப்ப செட்டியார் அவர்களுடன் நேர் உரையாடல்.